உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.

( பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

*Tamizh Oli* - Monograph on Tamizh Oli by C.D. Sanjeevi, Sahitya Akademi, New Delhi, (2004) Rs. 25.



முதல் பதிப்பு: 2004

ISBN-81-260-1719

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.

விற்பனை
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 0[illegible]

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூர் 560 001.

443, குணா காம்பளக்ஸ்(பழைய எண்.303 ),
அண்ணா சாலை, தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரஹாலய சாலை,
தாதர், மும்பய் 400 014.

விலை: ரூ. 25

அச்சகம்: சிக்மா கிராபிக்ஸ் சென்னை - 5

# உள்ளடக்கம்

# முன்னுரை

'தமிழ் ஒளிக்கும் உங்களுக்கும் என்ன உறவு?

'தமிழ் உறவு!'

'அப்படியும் ஓர் உறவா?'

'ஏன், இருக்கக்கூடாது?'

'இருக்கலாம், நடைமுறையில் குடும்ப உறவும், சாதி உறவும்தானே முன் நிற்கிறது-'

'என்னைப் பொறுத்தவரை தமிழுறவே - முன்நின்றது-'

'மகிழ்ச்சி அய்யா, உங்கள் நட்பு பெருமை கொள்ளத்தக்கதே. நான் பாராட்டுகிறேன்-'

1974இல் கவிஞர் தமிழ்ஒளிக்குப் பொன்விழா எடுக்கும் முயற்சியில் முனைந்திருந்தபோது, என்னைச் சந்தித்த தமிழாசிரியர் ஒருவருடன் நிகழ்ந்த உரையாடலையே இங்கு நினைவு கூர்ந்தேன்.

'தகைமை சான்ற தமிழ்க் கவிஞனைப் போற்றுதல் செய்யவும். அதன் பொருட்டு முன்நின்று செயல்படவும், அக்கவிஞருடன் குடும்ப உறவும் சாதி உறவும் உள்ளவர்களே ஆர்வம் காட்டுவர்'-என்ற தமிழாசிரியர் கணிப்பினை நான் புரிந்துகொண்டேன். ஆனால், ஏற்றுக் கொள்ளவில்லை.

இளமைக்காலத்தில் தமிழியக்கம் சார்ந்திருந்த நான், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தேன். அதன்வழி பாரதிதாசன் மாணவரே தமிழ்ஒளி என அறிந்து அவர் படைத்த 'வீராயி'குறுங்காப்பியத்தைப் படித்தேன்.

அந்நூலில் இயன்றுள்ள கவிதைகளில் வீறுடன் வெளிப்பட்ட புயலின் சீற்றமும்,பொங்குமாங் கடலின் கொந்தளிப்பும், கனன்ற நெருப்பின் கனலும் என்னை வெகுவாகப் பாதித்ததை உணர்ந்தேன்.

காலம் காலமாக உழைத்துழைத்து ஏமாற்றங்களையே எதிர் கொண்டு வாழும் மக்களின் துன்ப .துயரங்களை உணர்வுப்பூர்வமாக ஏற்றுக் காவியம்படைத்த மக்கள் கவிஞராகவே தமிழ்ஒளியை அறியச் செய்தது.

உண்மையில் 1947இல் வெளிவந்த 'வீராயி' காவியத்தை இரண்டாண்டுகளின் பின்னரே நான் படித்தேன். நூலின் தொடக்கவரிகள்:

''மழைபிடித்துப் பெய்கிறது ஐப்பசியில்; ஏழை
மனங்குமுறும் விதம்போலும் இடிக்கிறது வானில்''

என்ற தொடர்மொழிகள் மின்னலாய்த் தாக்கி மனதில் நிலைத்துவிட்டன.

மனம் கவர்ந்த அந்த மாகவிஞரைத் தோழர் ரகுபதி அவர்கள், (1954இல்) எங்கள் அறைக்கு அழைத்து வந்து அறிமுகம் செய்துவைத்தபோது, வியப்பும் மகிழ்ச்சியும் மேலிட அவரை வரவேற்றோம்.

அன்று தொடங்கி, அவர் மறையும் காலம் வரை அவருக்கு நண்பனாகவும், நம்பிக்கைக்கு உரியவனாகவும் விளங்கி, நட்புக் கடனாற்றும் பேற்றினை நான் பெற்றேன்.

1965இல் தமிழ்ஒளி மறைந்ததும், புதுவை சென்று அவருடைய தந்தை திரு.பொ.சின்னையா அவர்களைச் சந்தித்து, 'ஏடுகளில் வெளிவந்துள்ள தனிக்கவிதைகளைத் திரட்டி நூலாக வெளியிட அனுமதி பெற்று வந்ததும்;

பின்னர், மறுபதிப்பு வெளிவராத நூல்களை மீண்டும் வெளியிட, உரிய பதிப்பகத்தாரிடம் பதிப்புரிமை பெற்றதும்;

அதனைத் தொடர்ந்து கவிஞர் படைப்புகளை அச்சிட்டு நான் வெளியிட்டதும்;

'தமிழ்ஒளியைத் தமிழ்மக்கள் மத்தியில் நிலைபெறச் செய்துவிட்டார் சஞ்சீவி' எனத் தமிழன்பர்கள் பாராட்டுரைத்ததும்,

'தமிழ் ஒளிக்கும் எனக்கும் உள்ள உறவு தமிழுறவே' என்பதை மெய்ப்பித்துவிட்டதில் எனக்கு மனநிறைவு உண்டு.

ஆயினும், கவிஞரைப் பொறுத்தவரை யாரிடத்தும் நிறைவான அன்பையோ, நிலையான நட்பையோ பாராட்டி வந்தாரென யாராலும் உறுதிப்படுத்த முடியாதென்பதும் உண்மையே!

அவர், மற்றவர்களிடம் எப்படி நடந்து கொண்டார் என்பதற்கு, 'தாமரை இலைத் தண்ணீரின் நிலையைத்தான் உவமைகூற முடியும்.

ஒரு கவிஞன் சராசரி மனிதனாக நடந்துகொள்ளமாட்டான் என்பதைப் புரிந்துகொள்ளுவதற்கு எனக்கு அதிக கால அவகாசம் தேவைப்பட்டது.

'கவிஞர் தமிழ்ஒளி படைப்பாற்றல் மிக்க பெருங்கவிஞர். தமிழுக்குப் பெருமை சேர்க்கும் காவிய படைப்புகளை அவரால் தரமுடியும். அதன்பொருட்டு, அவருக்குள்ள இயல்பான குண

தோஷங்களைப் பொருட்படுத்தக்கூடாது என்பதும் பின்னர் தெளிவாயிற்று.

இந்த நிலைப்பாடே, அவருடைய பிற்கால படைப்புகளுக்கு நான் உறுதுணையாக இருக்கவும் ஏதுவாயமைந்தது.

இன்று தமிழ் ஒளியைத் தமிழகம் தெரிந்துகொண்டது. அவருடைய படைப்புகளின் சிறப்பினைப் புரிந்துகொண்டது.

1998இல் சென்னையில் அவருக்குப் பவளவிழா -(75-ஆவது பிறந்த நாள் விழா) கொண்டாடப்பட்டதும், புதுவை அரசாங்கம் 1999 தொடங்கி, ஆண்டுதோறும் கவிஞர் தமிழ்ஒளியின் பிறந்த நாளை கொண்டாடி வருவதும் வரலாற்றுப் பதிவுகளாகிவிட்டன.

இந்திய இலக்கியவாணர்களில் ஒருவராகத் தமிழ்ஒளியை அங்கீகரித்து, அவர்தம் வரலாற்றினை நாடறியச் செய்யும் நோக்கில், 'தமிழ்ஒளி - வரலாறு' எழுதும் வாய்ப்பினை மிக எளிய மனிதனாகிய எனக்கு வழங்கிய 'சாகித்திய அகாதெமி' நிறுவனத்திற்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

புகழுக்கும் போற்றுதலுக்கும் உரிய மாகவிஞர் தமிழ்ஒளியின் வரலாற்றினைக் கற்பனை ஏதுமின்றி நான் அறிந்த அளவில் உண்மைகளை மட்டும் தொகுத்துரைக்க முயன்றுள்ளேன்.

இந்நூல், ஆக்கம்பெற ஒத்துழைப்பு நல்கிய அன்புத் தோழர் க. சந்திரசேகரன், தமிழ்ப் பேராசிரியப் பெருந்தகை திருமதி வெ.கனகசுந்தரம் ஆக இருவர்க்கும் நன்றி கூறுவதில் மன நிறைவடைகிறேன்.

அன்புடன்

செ.து.சஞ்சீவி

சென்னை 40
ஜூலை 2004

# 1

# வாழ்க்கைக் குறிப்பு

(1924-1965)

*''சீறி அடித்துச் சுழன்ற அலைகளில்*
*சிக்கிய ஓர்படகாய் - தடு*
*மாறி இளைத்து மடிந்த மகாகவி*
*தன்சரிதம் உரைப்பேன்''*

என்று மகாகவி சுப்பிரமணிய பாரதி குறித்துப் பாடியவர் தமிழ்ஒளி.

தமிழ் ஒளிக்கு அமைந்த வாழ்க்கையை எண்ணும்போது, இக்கூற்று அவருக்கும் பொருந்தும் எனத் தோன்றுகிறது.

தமிழ் ஒளியைப் படியுங்கள்.

குழந்தைப் பருவத்தில்'பட்டுராசு' என நலம் பாராட்டப் பெற்றவர். இயற்பெயர் விஜயரங்கம். ஆரம்பக்கல்வியை அரசுப் பள்ளியிலும், உயர்நிலைக் கல்வியை 'கல்வே கலாசாலை'யிலும், தமிழ்க்கல்வியை கரந்தை செந்தமிழ்க் கல்லூரியிலும் பயின்றவர். கற்றுத் தெளிந்த பின்னர், கவிஞர் தமிழ் ஒளியாக நாட்டுக்கு அறிமுகமானவர்.

திரு. பொ.சின்னையா - திருமதி செங்கேணியம்மாள் தம்பதியர்க்குத் தலைமகனாகப் பிறந்தவர் தமிழ்ஒளி. அவர் பிறந்த நாள், இரக்தாட்சி ஆண்டு, புரட்டாசித் திங்கள் ஆறாம் நாள் (21.09.1924).

அவருக்கு சகோதரிகள் இருவர் உண்டு. ஒருவர் உடன்பிறப்பு, பெயர் வள்ளியம்மை. அடுத்தவர் சிற்றப்பா மகள், பெயர் சரோஜா. இவர்களில் இரண்டாமவரே, இவர்பால் மிகுந்த அன்பு பாராட்டி அரவணைத்தவர். கவிஞர் நெஞ்சில் இடம் பெற்றவர்.

புதுச்சேரி சாமிப்பிள்ளைத் தோட்டம் அவர் குடும்பத்தினர்க்குப் பூர்வீக வசிப்பிடம். அங்குள்ள தென்னந்தோப்பின் ஒரு பகுதியும் அவர்களுக்குச் சொந்தமாக இருந்தது.

## 1942

மாணவப் பருவத்தில் அவர் படைத்த கவிதைகள் 'சக மாணவர்களிடையே பரவலாகப் பேசப்பட்டதும் முற்போக்கான கருத்துக்களை அவை பறைசாற்றின என்றும் நண்பர்கள் கூறக் கேட்டோம்.

புதுவையில் உறவு வழி நண்பர் திரு. ஆனந்தன் வாயிலாக தமிழ்ஒளிக்குப் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் மகன் மன்னர்மன்னன் அறிமுகமானார். அவர்கள் இருவரும் திராவிடர் கழகத் தோழர்களாக புதுவையை வலம் வந்தனர்.

திரு. மன்னர்மன்னன் அவர்கள், 'முரசொலி' ஏட்டை திருவாரூரிலிருந்து வரவழைத்து விநியோகித்து வந்தார். சுயமரியாதை இயக்கக் கருத்துக்களைப் பரப்ப நாமும் ஒரு ஏட்டைத் தொடங்கலாமென்ற கருத்தினை வலியுறுத்தினார் தமிழ்ஒளி.

நிதி ஆதாரம் இல்லாததால் கையெழுத்து ஏடாக வெளியிடலாமென முடிவு செய்தனர். 'முரசு' என்கிற பெயர் பொறித்து பன்னிரண்டு பக்கங்களுடன் முதல் பிரதியை உருவாக்கினர். தமிழ்ஒளி பத்துப்படிகள் எழுதினார். மற்ற நண்பர்கள் ஒன்றிரண்டு படிகளை எழுதினர்.

'முரசு' ஏட்டுப்படி சுயமரியாதை இயக்கத் தோழர்கள் படிக்கக் கொடுக்கப்பட்டது. ஒருவர் படித்ததும் மற்றவர்க்குப் படிக்கக் கொடுக்க வேண்டுமென்பது விதி.

தமிழ்ஒளியின் கைவண்ணம் ஏடு முழுவதும் முத்துமுத்தாக முறுவல்காட்டின. அத்துடன் அவர் எழுதிய கவிதைகளும் 'தமிழ்ஒளி' என்ற பெயருடன் படிப்பவர் கருத்தைக் கவர்ந்தன.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் 'முரசு' ஏட்டைப் படித்துப் பார்த்துப் பாராட்டினார். குறிப்பாகத் தமிழ்ஒளியை நேரில் அழைத்துப் பாராட்டினார்.

'முரசு' ஏட்டின் வெளிப்பாடு அவ்விதழின் மீது அரசாங்கம் வழக்குத் தொடுக்கும் அளவுக்கு வளர்ந்தது.

நீதிமன்றம், ஏட்டை வெளியிட்ட இளைஞர்களில் ஒருவரான மன்னர்மன்னனை வயது காரணமாக மன்னித்து விடுதலை செய்தது. தமிழ்ஒளியை நன்னடத்தை ஜாமீனில் விடுவித்தது.

இந்த நிகழ்வுக்குப் பின்னர், தமிழ்ஒளியை அழைத்து, 'அடிக்கடி இங்கே வந்துக்கிட்டிரு' எனக் கட்டளையிட்டார் பாரதிதாசன். அதனை ஏற்று, நாள்தோறும் அங்கே சென்று வந்தார் தமிழ்ஒளி.

பாரதிதாசன் எழுதிவந்த 'பாண்டியன் பரிசு' காவியத்தின் கையெழுத்துப் படியினை நகல் எடுக்கும் பொறுப்பினை ஒப்புக் கொண்டு செம்மையாகச் செய்து கொடுத்தார் தமிழ்ஒளி.

அந்நாளில், மாலை வேளையில் தங்கள் வசிப்பிடத்திற்கு அருகில் உள்ள குயில் தோப்பிற்குச் சென்று இயற்கை எழிலை ரசித்து மகிழ்வதும், அந்த உணர்வுடன் கவிதை புனைவதும், அப்படி எழுதப் பட்ட கவிதைகளைத் தினமும் பார்வையிட்டு பாரதிதாசனார் பாராட்டுரைப்பதும் வழக்கமாக நடந்து வந்ததாம்.

வயது வந்த பிள்ளை தொழில் செய்து சம்பாதிக்காமல், காலத்தை வீணாக்கி வருவதாகப் பெற்றோர் குறைபட்டுக் கொண்டனர்.

நண்பர்களும், 'தமிழ் வித்வானு'க்குப் படித்தால் வாத்தியார் வேலைக்குப் போகலாமென்றும் சுட்டிக்காட்டினர்.

## 1943

தஞ்சை சென்றார் தமிழ்ஒளி. அங்கிருந்தபடியே, மன்னர் மன்னனுக்குக் கடிதம் எழுதி, கரந்தைத்தமிழ் கல்லூரியில் சேர, பாரதிதாசனிடமிருந்து பரிந்துரைக் கடிதம் பெற்று அனுப்புமாறு கேட்டுக் கொண்டார்.

பாரதிதாசனும், கரந்தைப் பெரும்புலவர் கோ.சி.பெரியசாமி அவர்களுக்குப் பரிந்துரைத்து கடிதம் அளித்தார். கரந்தைக் கல்லூரியில் சேர்ந்தார் தமிழ்ஒளி.

கல்லூரி மாணவர்களிடையே ஒரு கவிஞராக நடமாடினார் தமிழ்ஒளி. ஆசிரியர்களும் அவருடைய கவிதைகளைப் படித்துப் பாராட்டினர்.

முதலாமாண்டு மாணவரான தமிழ்ஒளி கல்லூரியில் அனைவரது கவனத்தையும் கவர்ந்தது,மேட்டுக்குடி மாணவரிடையே காழ்ப் புணர்வை வளர்க்க ஏதுவாயிற்று.

அவரைப் பற்றி ஆராயத் தொடங்கினர். அவர் பின்னணி இன்னது என அறியப்பட்டது. 'சுயமரியாதைக்காரர்', 'பாரதிதாசன் மாணவர்', 'தாழ்த்தப்பட்ட சாதிக்காரர்' என்பதற்கும் மேலாக ஏதும் புலப்படவில்லை.

அந்த அடையாளங்களில் 'சாதி' ஒன்றே மேட்டுக்குடி மாணவர்களுக்குப் போதுமானதாகத் தெரிந்தது.

ஒருநாள் இரவு உணவு விடுதியில் 'அந்த அடையாளம்' ஏளனப் பேச்சாக எழுந்தது. தமிழ்ஒளி அதிர்ந்து போனார்.

மறுதினம் புதுவை சென்று பாரதிதாசனிடம் முறையிட்டார். உடனே பாரதிதாசன் தஞ்சைவந்து முதல்வரைச் சந்தித்தார். அப்போது கல்லூரி முதல்வராயிருந்தவர் புலவர் பொன். மீனாட்சி சுந்தரனார். சுயமரியாதைக் கொள்கைகளில் ஈடுபாடுமிக்கவர். அவர், பாரதி தாசனைச் சமாதானப் படுத்தி 'இனி பிரச்சினை வராது. தமிழ்ஒளியை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்'என உறுதி மொழிந்து வழியனுப்பி வைத்தார்.

'தமிழ்ஒளியை' அறிய முயன்றவர்களிடம் பாரதிதாசனே இந்நிகழ்வை நினைவுகூர்ந்து கூறியுள்ளதும் உண்மையாம்.

தமிழ்ஒளி படிப்பைத்தொடர்ந்தார். முதலாமாண்டு தேர்வினை எழுதி முடித்தார். புதுவை திரும்பிய அவர் மீண்டும் கரந்தையில் காலடி வைக்கவில்லை.

கரந்தையில் படித்த நாட்களில், அவர் எழுதிய மேடை நாடகம் 'சிற்பியின் கனவு'.

ஒரு மாணவர் உதவியுடன், 'சக்தி நாடக சபா' உரிமையாளர் திரு. சக்தி கிருஷ்ணசாமி அவர்களிடம் நாடகத்தை அரங்கேற்றுமாறு கேட்டுக் கொண்டனர்.அவரும் படித்துப்பார்த்து ஆவன செய்வதாக உறுதி மொழிந்தார். புதுவை வந்த தமிழ்ஒளி, நாடக அரங்கேற்ற நாளை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்.

## 1944

அந்தக் காலத்தில் கல்லூரி விடுமுறைக் காலங்களில் திராவிட மாணவர் கழகச் செயல்பாடுகள் தீவிரமடைவது வழக்கம்.

அப்போது, பண்ணுருட்டியில் நடைபெறவிருந்த திராவிட மாணவர் கழக மாநாட்டிற்குப் பாரதிதாசன் அழைக்கப் பட்டிருந்தார். சில தவிர்க்க இயலாத காரணங்களால், அவர் செல்லவில்லை. ஒரு வாழ்த்துக் கவிதையை எழுதி தமிழ்ஒளி வாயிலாக அனுப்பி வைத்தார். அந்தக் கவிதையை மாநாட்டு மேடையில் கணீரென்ற குரலில் வாசித்துக் காட்டி அனைவரின் கரவொலியையும் பெற்றார்

தமிழ்ஒளி. அதனை அடுத்து, குடந்தையில் நடைபெற்ற திராவிட மாணவர் கழகப் பயிற்சி முகாமிலும் பங்குகொண்டார், தமிழ்ஒளி.

இந்தக் காலகட்டங்களில்,'திராவிடநாடு', 'குடியரசு' முதலான திராவிட இயக்க ஏடுகளிலும் அவருடைய கவிதைகள் இடம் பெற்று வந்தன.

தமிழ்ஒளி, தான் ஒரு கவிஞன் என்ற முறையில், தன்னுடைய உணர்வோட்டங்களைக் கவிதைகளில் பதிவு செய்வதை வழக்கமாகக் கொண்டார்.

பாரதிதாசன் 'பாண்டியன் பரிசு' காவியத்தை நகல் எடுத்தபோது நேர்ந்த பாதிப்புகளை நினைவுகூர்ந்து, ஒரு குறுங்காப்பியத்தை உருவாக்க விரும்பினார். அதுவே, 'கவிஞனின் காதல்' என்றபெயரில் ஒரு முன்மாதிரிப் படைப்பாக, உயிர்த்துடிப்புள்ள குறுங்காப்பியமாக எழுதி முடிக்கப்பட்டது.

அந்தச்சமயத்தில் 'சக்தி நாடக சபா'விடமிருந்து தமிழ்ஒளிக்கு கடிதம் வந்தது. 'சென்னை ஒற்றை வாடை தியேட்டரில் முகாமிட்டுள்ளதாகவும், அங்கு நடைபெறும் 'சிற்பியின் கனவு' ஒத்திகையைக் காண வருமாறும் தகவல் சொல்லப்பட்டது.

புதிய நம்பிக்கையுடன் சென்னை சென்றார். ஒத்திகை காட்சிகளைப் பார்த்தார். அவர்கள் கேட்டுக் கொண்டபடி சில திருத்தங்களைச் செய்து கொடுத்துவிட்டு ஊர் திரும்பினார்.

அடுத்த திங்களில், 'சக்தி நாடக சபா'பெங்களூர் சென்று முகாமிட்டது. முதல் நாடகமாக 'சிற்பியின் கனவு' அரங்கேறுவதைக் காண வருமாறு மீண்டும் அழைப்பு வந்தது.

கவிஞர் உற்சாகமாக பெங்களூர் பயணமானார். சக்தி கிருஷ்ணசாமி அவரை அன்புடன் வரவேற்றார். ஒருவார காலம் அங்கே தங்கியிருந்து, நாடக நிகழ்ச்சிகளை ரசிகர்களுடன் அமர்ந்து கண்டுகளித்தார்.

அந்த நாடகத்தில் கதாநாயகனாக நடித்தவர் சிவாஜிகணேசன். பின்னாளில், அந்த நாடகக் கதை 'வணங்காமுடி' என்ற பெயரில் திரைப்படமாக வெளிவந்தபோதும் அவரே கதாநாயகனாக நடித்துள்ளதையும் இங்கே குறிப்பிடவேண்டும்.

தமிழ்ஒளியை நன்கு உபசரித்து நாடகத்திற்குரிய சன்மானத் தொகையாக ரூபா தொள்ளாயிரமும் வழங்கி, அவரை வழியனுப்பி வைத்தார் சக்தி கிருஷ்ணசாமி.

புதுவை திரும்பிய தமிழ்ஒளி கொண்டுவந்த பணத்தை பெற்றோரிடம் கொடுத்து அவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

## 1945

புதுவையில் தமிழ்ஒளி வாழ்ந்து வந்த பகுதியில் நடந்துவிட்ட ஒரு சம்பவம், அவரை வெகுவாகப் பாதித்தது.

ஒரு காதல்ஜோடி சாதியை முன்னிறுத்திப் பிரிக்கப்பட்டதும், அந்தக் காதல் இளைஞனை அச்சுறுத்தி ஊரைவிட்டே விரட்டிவிட்டு, இளம்பெண்ணை ஒரு பணக்கார கிழவனுக்கு விலைபேசி விற்கப் பட்டதும் அவருக்கு அதிர்ச்சியளித்தது.

புதுவையில் இப்படி நடப்பது இயல்பானது என்றும் சிலர் கூறினர். தமிழ்ஒளியின் மனம் பொறுக்கவில்லை. தன்னுடைய மனக்குமுறலை வெளிப்படுத்த அந்த நிகழ்ச்சியை மையமாகக் கொண்ட ஒரு கதையை குறுங்காப்பியமாக எழுதி முடித்தார். அதுவே 'நிலைபெற்ற சிலை'! என்னும் காவிய நூலாகும்.

கவிஞரின் கன்னி முயற்சியாகக் காவிய வடிவம் பெற்ற 'கவிஞனின் காதல்', மனக்குமுறலில் உருவான 'நிலைபெற்ற சிலை' இரண்டுமே நூலாக வெளிவர வேண்டுமென விரும்பினார் தமிழ்ஒளி.

அதற்கான வாய்ப்பு புதுவையில் இருந்தால் கிட்டாது என நினைத்து, சென்னை நோக்கிப் பயணமானார். சென்னை வந்ததும் இலக்கிய ஏடுகளின் முகவரிகளைக் கண்டறிந்து, அந்த அலுவலகங்களை நாடிச் சென்றார். தமிழார்வம் மிக்க ஏடுகள் அவரிடமிருந்து கவிதைகளை ஏற்றுக் கொண்டன.

'பிரசண்ட விகடனில்' கவிதை வெளிவந்தது. உரிய சன்மானம் அளிக்கும்படி ஆசிரியரை அணுகிக் கேட்டார் தமிழ்ஒளி. 'இங்கே பணம் கொடுக்கும் பழக்கமில்லை. பாராட்டுரை மட்டுமே வழங்கப்படும்' என ஆசிரியர் நாரண துரைக்கண்ணன் நயம்படக் கூறிவிட்டாராம்.

அந்நாளில், சன்மானம் வழங்கும் வழக்கம் உள்ள பத்திரிகைகள் பலவும் கவிதைகளைத் தவிர்த்து வந்தன. இலட்சிய ஏடுகள் சில, கவிதைகளை வெளியிட்டு அன்பு ஊதியமாக சிறு தொகை வழங்கின.

பொதுவாக, கவிதை எழுதிவந்த இளைஞர்கள் பலரும் சன்மானத்தை எதிர்பார்க்கவில்லை. பெருங்கவிஞர்களுக்கு மத்தியில்

தங்கள் பெயரும் அறிமுகமானால் போதுமென்ற மனோபாவமே அவர்களிடம் நிலவி வந்தது.

இந்த நிலைப்பாடு தமிழ்ஒளிக்கு உடன்பாடானதல்ல. எனினும், அந்த இளைஞர்களின் தொடர்பு அவருக்கு ஆதரவாயமைந்தது. கொஞ்ச காலம் சென்னைக்கும் புதுவைக்குமாக அவர் பயணித்துக் கொண்டிருந்தார்.

**1946**

பர்மாவிலிருந்து தாயகம் திரும்பிய கவிஞர் குயிலன், தமிழ்ஒளியின் நெருங்கிய நண்பரானார்.

'குயிலன்' வெளியிட்ட 'கவிமலர்' ஏட்டில் தமிழ்ஒளி எழுதினார். இருவரும் எழுதிய குழந்தைப் பாடல்களை 'பரிசு' என்ற தலைப்பில் சிறு நூலாக 'குயிலன்' அச்சிட்டு வெளியிட்டார்.

அதன்பின்னர், தங்கள் கவிதை நூல்களை வெளியிட பதிப்பகங்கள் முன்வரும் என இருவரும் எதிர்பார்த்தனர். அப்படி நிகழ்ந்துவிடவில்லை.

அந்த ஆண்டின் இறுதியில் ('டிசம்பர் 14,15) தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் இரண்டாவது மாநாடு சென்னை ஒற்றைவாடை தியேட்டரில் நடைபெற்றது.

எழுதுவதைத் தொழிலாக்கிக் கொண்ட இலட்சிய எழுத்தாளர் களுக்கு அந்த மாநாடு நல்வழிகாட்டுமென்ற எதிர்பார்ப்புடன் பலர் அங்குக் கூடினர். குயிலனும் தமிழ்ஒளியும் அதில் கலந்து கொண்டனர்.

மாநாட்டு நிகழ்ச்சியில் இளம் எழுத்தாளர்களிடம் அறிஞர் வா.ரா.காட்டிய அன்பும் 'அறிஞர் அண்ணா' கூறிய அறிவுரையும் அவர்களைக் கவர்ந்தது. அதுதவிர, வளரும் எழுத்தாளர்களுக்கு வழிகாட்டக்கூடிய ஏதும் அங்கு நிகழ்ந்திடவில்லை.

மாநாட்டு அரங்கில் நிலவிய போலித்தனங்கள் தமிழ்ஒளியை ஆழமாகப் பாதித்தன. எழுத்தாளர்களிடையே சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் பேணுவதில் அக்கறையில்லாத 'பூர்ஷ்வா' மனப்பான்மையுள்ள இந்த எழுத்தாளர் சங்கம் உழைப்பாளர் வர்க்கத்தின் விரோதி என்றும் அவர் கருதினார்.

தமிழரசுக் கழகத் தலைவர் திரு.மா.பொ.சி.யை ஆசிரியராகக் கொண்ட 'தமிழ்முரசு' ஏட்டின் பொறுப்பாளராக இருந்து

வெளியிட்டவர் தோழர் ஊ.கோவிந்தன். தமிழ்ஒளியை விட ஓராண்டு இளையவர். கவிதையில் ஆர்வமுள்ளவர். 'தமிழ்முரசு' ஏட்டில் தமிழ்ஒளியின் கவிதைகளை வெளியிட்டு நிதி கொடுத்து உதவியவர். கவிஞருக்கு நண்பரானவர்.

அப்போது வெளிவந்த 'முற்போக்குச் சிந்தனையுள்ள எழுத்தாளர்கள்' அணிதிரண்டு அகில இந்திய அளவில் சங்கம் அமைத்துவரும் செய்தி தமிழ்ஒளியையும் ஆட்கொண்டது.

சென்னையில் உள்ள முற்போக்கு எண்ணம்கொண்ட எழுத் தாளர்களை ஒன்றுதிரட்டி சங்கம் அமைக்கும் முயற்சியில் நண்பர் களுடன் இணைந்து செயல்பட்டார் தமிழ்ஒளி. அப்படி உருவாக்கப் பட்ட முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் செயலாளர்களில் ஒருவராகவும் அவர் பொறுப்பேற்றுக் கொண்டார்.

## 1947

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுடன் கருத்து மாறுபட்ட திருவாரூர் இராமன் 'குயில்' ஏட்டைத் தன் பொறுப்பில் வைத்துக்கொண்டு சென்னையிலிருந்து வெளியிட்டார். அவ்வேட்டில் தமிழ்ஒளியின் இரண்டு கவிதைகள் இடம் பெற்றன.

அதே ஆண்டில், புரட்சிக்கவிஞர் நூல்களை வெளியிட்டுவந்த முல்லை முத்தையாவுக்கும் பாரதிதாசனுக்கும் கருத்து மோதல் நிகழ்ந்து வந்தது. இதனை உணராமல் 'முல்லை' அலுவலகத்தில் காலடி வைத்தார் தமிழ் ஒளி.

இவ்விரண்டு செய்திகளும் பாரதிதாசனார்க்கு எதிரானவர்களுடன் தமிழ் ஒளி கைகோர்த்துக் கொண்டுள்ளதாக புதுவையில் பேசப்பட்டதாம். தமிழ் ஒளி கொள்கை பிறழ்ந்துவிட்டதாகவும் கண்டனங்கள் எழுந்தனவாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில், திருவாரூர் இராமன் அவர்கள் தமிழ் ஒளியின் கவிதை நூல்களை வெளியிடுவதாகக் கூறி அவரிடமிருந்த இரண்டு கவிதைத் தொகுதிகளையும் பெற்றுக் கொண்டார்.

இது இக்கட்டான சூழலை உருவாக்கியது.

தோழர் ஊ.கோவிந்தன், 'தமிழ் முரசு' பொறுப்பினைக் கைவிட்டு, பொதுவுடைமை இயக்கத்தில் தீவிரமாகக் காலூன்றினார்.

தமிழ்ஒளியையும் பொதுவுடைமை இயக்கத்தில் இணைய பெருமுயற்சி எடுத்துக் கொண்டார். அது வீண் போகவில்லை.

திருவாரூர் இராமன், கொள்கை ரீதியாக கருஞ்சட்டைக்காரர். தமிழ்ஒளியின் கொள்கைப் பிறழ்ச்சி அறிந்து சினம் கொண்டார் போலும். இதனால், தமிழ்ஒளி எழுதிய கவிதைகளை நூலாக வெளியிடுவதாகக் கூறி தமிழ்ஒளியிடம் இருந்து பெற்றுச் சென்ற கவிதைத் தொகுதிகள் இரண்டும் தொலைந்து போனதாகத் துணிந்து சொல்லிவிட்டார்.

எவ்வளவு முயன்றும் கையெழுத்துப் படிகளை அவரிடமிருந்து திரும்பப் பெற முடியவில்லை. இது ஒரு பெரிய ஏமாற்றம். தன்னுடைய வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தும் 'சதி' என்றும் தமிழ்ஒளி கருதினார். முற்போக்கு எழுத்தாளர் சங்கத் தோழர்கள் அவருக்கு தைரியமூட்டினர்.

ஒரு கவிஞனுக்குப் பெருமைசேர்ப்பதும், அவனுடைய எழுத்துக்கு வலிமை கூட்டுவதும் உரமான சிந்தனையும் உன்னத படைப்புகளுமே யாகும்.

எதிர்காலம் என்பது அவரவர் மேற்கொள்ளும் முயற்சியைப் பொறுத்தே அமைகிறது. அதனைத் தடுத்து நிறுத்த யாராலும் முடியாது. ஆம், 'வானத்து விண்மீனை இருள் அழித்தல் இல்லை'. இது தெளிவான உண்மை.

ஆரம்பக் காலத்தில், பொதுவுடைமை இயக்கத் தொடர்பு அவருடைய தன்னம்பிக்கையை வளர்ப்பதாகவே அமைந்தது.

நாள்தோறும் செங்கொடி ஏந்தி ஊர்வலமாகச் செல்லும் தொழிலாளர்களைக் கண்டு உணர்ச்சி வசப்படுவார்.

அன்றாட வாழ்க்கைக்குப் போராடும் அவர்களின் மனக் குமுறலைத் தமிழ்ஒளி கவிதைகளில் பதிவு செய்வார். அந்தக் கவிதைகளை ஏடுகளில் வெளியிடச் செய்யும் பொறுப்பினைத் தோழர் கோவிந்தன் ஏற்றுக்கொள்வார்.

தமிழ்ஒளியைத் தமிழ்மக்கள் உணர்ந்து போற்ற வேண்டுமென்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார் தோழர் கோவிந்தன். அவருக்காகப் பதிப்பகம் தொடங்கவும் முடிவுசெய்தார்.

அந்த ஆண்டு ஜூலையில் 'புதுயுக நிலையம்' பெயரில் 'நிலைபெற்ற சிலை' குறுங்காப்பியத்தைக் கையடக்கப் பதிப்பாக வெளியிட்டு தமிழ்ஒளியை மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

தோழர் கோவிந்தனின் உறவினர் தோழர் மா.சு.சம்பந்தம் திராவிடக் கழகத் தோழர். 'தமிழர் பதிப்பகம்' நிறுவி நூல்களை

வெளியிட்டு வந்தவர். அவர், கவிஞரிடம் புதிய காவியம் ஒன்றை எழுதித்தருமாறு கேட்டுக் கொண்டார். அவருக்காக குறுகிய காலத்தில் 'வீராயி' காவியத்தை எழுதிக் கொடுத்தார் தமிழ்ஒளி

அந்த நூல் அச்சாகி வந்த நிலையில், தமிழ் ஒளியின் தொடக்ககாலப் படைப்பான 'கவிஞனின் காதல்' குறுங் காப்பியத்தை வெளியிட 'முத்தமிழ் நிலையத்தார்' முன் வந்தனர்.

ஆண்டின் இறுதியில் கவிஞர் பேரால் மூன்று குறுங்காப்பியங்கள் அச்சாகி வெளிவந்தன.

'கொள்கை பிறழ்ந்து விட்டார் தமிழ்ஒளி' எனக் குறைப்பட்டுக் கொண்ட திராவிடக் கழகத் தோழர்கள் அவர் எழுதிய புதிய நூல்களை வாங்கிப் படித்துவிட்டு, 'தமிழ்ஒளி நேற்று சொன்ன கொள்கையைத்தான் இப்போதும் சொல்லிக் கொண்டிருக்கிறார். கொள்கைப் பிறழ்ச்சி பற்றி இனி யாரும் பேசத் தேவையில்லை என்றனர்.

புதிய படைப்புகள் தமிழறிஞர்கள் பார்வைக்குச் சென்றன. 'வீராயி' நூலைப் பற்றி 'கலைமகள்' ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் சென்னை 'வானொலி'யில் விமர்சன உரை நிகழ்த்தியதும், 'நிலைபெற்ற சிலை' நூல் குறித்து பேராசிரியர் முனைவர் அ. சிதம்பரநாதன் திருச்சி 'வானொலி'யில் விமர்சனம் செய்ததும் தமிழ்ஒளிக்குப் பெருமை சேர்த்தன என்பதை இங்கே சொல்லத்தான் வேண்டும்.

பொதுவுடைமை இயக்க ஏடுகளில் கவிதை எழுதிக் கொண்டிருந்த குயிலன், தமிழ்ஒளி இருவரும் 'கம்யூனிஸ்ட் கவிஞர்கள்' என பிறரால் சுட்டப்படும் நிலையும் அப்போதுதான் உருவாயிற்று.

சுதந்திர தினத்தையொட்டி சென்னை 'வானொலி'யில் ஒரு கவியரங்கம் நடத்த ஏற்பாடானது. அதில் பங்குபெற 'தமிழ்ஒளி'யின் பெயரை பத்திரிகையாளர் நாரண துரைக்கண்ணன் பரிந்துரை செய்திருந்தார்.

பன்மொழிப் புலவர் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தலைமையிலும், சென்னை மாகாணப் பிரதமர் கனம் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் முன்னிலையிலும் கவியரங்கம் சிறப்பாக நடைபெற்றது.

'சுதந்திரம்' என்ற தலைப்பில் 'தமிழ்ஒளி' கவிதை படைத்தார். அதில், சுதந்திரப் போராட்ட வரலாற்றையும், வந்த சுதந்திரம் உழைப்பாளி வர்க்கத்திற்கு வாழ்வளிக்க வேண்டுமென்ற கருத்தினையும் வலியுறுத்தி யிருந்தார்.

கவிதையை முழுமையாகக் கேட்டு ரசித்த பிரதமர் ஓமந்தூரார் தமிழ்ஒளியை வெகுவாகப் பாராட்டினார்.

அந்த ஆண்டில், இந்திய அரசாங்கத்தைக் கவிழ்க்கச் சதி செய்ததாகக் கூறி 'இந்திய பொதுவுடைமைக் கட்சி'யினை அரசாங்கம் தடை செய்தது.

விளைவாக, கட்சி அலுவலகம், தொழிற் சங்க அலுவலகங்கள், பத்திரிகை அலுவலகங்கள் அனைத்தும் 'சீல்' வைக்கப்பட்டன. தலைவர்கள் பலர் கைதாயினர். வேறு சிலர் தலைமறைவு வாழ்க்கையை மேற்கொண்டனர். நாட்டில் நடப்பதை கட்சி ஆதரவாளர்கள் அறிந்து கொள்ள இயலாத சூழ்நிலையும் உருவானது.

அப்போதுதான் 'முன்னணி' ஏடு முகிழ்த்தது கட்சியின் நம்பிக்கைக்குரிய தோழர் குயிலன் பொறுப்பில் ஏடு வெளிவந்தது. துணை ஆசிரியர் பொறுப்பில் 'தமிழ்ஒளி'யும் எஸ்.ஆர்.எஸ். ராஜனும் செயல்பட்டனர். 1948 அக்டோபர் தொடங்கி, 1949 செப்டம்பர் வரை தொடர்ந்து 48 இதழ்கள் வெளிவந்தன.

தமிழ்ஒளிக்கு அப்போது வயது இருபத்து நான்கு. துடிப்பான பருவம். உரமான சிந்தனை. அழுத்தமான கொள்கைப் பிடிப்பு. மடைதிறந்த வெள்ளம்போல் கவிப்பெருக்கு பீறிட்டெழும் மனப்போக்கு.

இரண்டாம் உலகப் போருக்குப் பின், வல்லரசுகள், காலனி நாடுகளில் நடத்திவந்த கொடுமைகளுக்கு எதிராக மக்கள் கிளர்ந்தெழுந்து போர்க்குரல் எழுப்பியதைத் தமிழ்ஒளி தமது கவிதையிலும் சிறுகதை, ஓரங்க நாடகங்களிலும் வீறுடன் பதிவு செய்தார்.

அந்த வரிசையில், 'மே தினத்தை' வரவேற்றுப் பாடிய கவிதையும், 'சீனப்புரட்சி'க்கு நல்வாழ்த்துக் கூறிய கவிதையும் தனிச்சிறப்புக்குரிய வரலாற்றுப் பதிவுகளாகும்.

## 1949

'முன்னணி' வெளிவந்து கொண்டிருந்தபோதே 'ஜனயுகம்' பெயரில் மார்க்சீய கொள்கை விளக்க ஏடு ஒன்றினையும் தமிழ்ஒளி தம் சொந்தப் பொறுப்பில் வெளியிட்டார். அது குறித்து குயிலன் எழுதிய விமர்சனம் 4.9.1949 'முன்னணி'யில் வெளியாகியுள்ளதைக் காணலாம்.

'முன்னணி' ஏடு தடை செய்யப்பட்ட பின்னர், குயிலனும் தமிழ்ஒளியும் தலைமறைவாயினர். 'போலீசார்' தேடும் பட்டியலில் தமிழ்ஒளியின் பெயர் இடம் பெற்றிருக்கவில்லை என்ற தகவல் தெரியவந்த பின்னரே 'தமிழ்ஒளி' வெளியில் நடமாடத் தொடங்கினார்.

அந்நாளில் தோழர் ஊ. கோவிந்தன் அவர்கள் 'புதுமை இலக்கியம்' திங்கள் இதழை வெளியிட்டார். அதில் தமிழ்ஒளி படைத்த 1. அமெரிக்கா, 2. அணுகுண்டு என்ற இரண்டு அற்புதமான கவிதைகள் வெளிவந்தன.

அந்நாளில், பொதுவுடைமைக் கட்சி தடைசெய்யப்பட்டிருந்த போதிலும், 'சோவியத் நாட்டினை' நட்பு நாடாகவே இந்திய அரசாங்கம் ஏற்றிருந்தது.

அதனால், சோவியத் அதிபர் ஸ்டாலின் வாழ்க்கை வரலாற்றை பிரச்சார உத்தியுடன் நாடகமாக்கி அரங்கேற்றலாமென முடிவு செய்தனர்.

நாடகம் எழுதும் பொறுப்பினை தமிழ்ஒளி ஏற்றார். மேடை அனுபவமுள்ள நடிகரும், கட்சித்தோழருமான ரகுபதிக்கு ஸ்டாலின் வேடம் தாங்கி நடிக்க பயிற்சி அளித்து வந்தார் தமிழ்ஒளி.

ஒருநாள் ஒத்திகையைக் காணவந்த தோழர் எஸ். ராமகிருஷ்ணன் ஒரு புதிய பிரச்சினையை உருவாக்கியதாகவும், அது தொடர்பாக அவருக்கும் தமிழ்ஒளிக்கும் கருத்து வேறுபாடுகள் எழுந்து நாடக முயற்சி அறவே தடுத்து நிறுத்தப்பட்டதாகவும் கட்சித் தோழர்க ளிடையே செய்தி பரவியது.

## 1950-53

1950இல் சுதந்திர இந்தியா, குடியரசு நாடாகப் பிரகடனப் படுத்தப்பட்டது. 1952இல் எல்லோருக்கும் வாக்குரிமை அடிப் படையில் பொதுத் தேர்தல் நடைபெறுமென அறிவிக்கப் பட்டது.

இதனையொட்டி, தடைசெய்யப்பட்ட பொதுவுடைமைக் கட்சி புத்துயிர் பெற்று எழுந்தது. தலைவர்கள் விடுதலையாயினர். அனைத்து அமைப்புகளும் செயல்படத் துவங்கின. 'ஜனசக்தி' ஏடு 'தமிழ்ஒளி'யின் வாழ்த்துக் கவிதையோடு புதுப்பொலிவுடன் வெளி வந்தது.

'முன்னணி'யில் வெளிவந்த 'தமிழ்ஒளி'யின் படைப்புகளில் சில, 'சோஷலிஸ்ட்' தோழர் எஸ்.சங்கரன் முயற்சியால் நூல் வடிவம் பெற்று வெளியாயின.

அவை: சாக்கடைச் சமுதாயம் (சிறுகதைகள்), 'மேதினமே வருக!' (கவிதை நூல்'.)

1952இல் முதலாவது பொதுத்தேர்தல் நடந்தது. கம்யூனிஸ்ட் வேட்பாளர்கள் பெருமளவில் வெற்றிபெற்றனர். 1953இல் சென்னை மாகாணம் நான்கு மொழிவழி மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது. தமிழ்நாடு, சென்னை மாநிலமானது. அதன்மூலம் பொதுவுடைமைக் கட்சியின் பலம் சிதைந்தது. சட்டமன்றத்தில் எதிர் வரிசையில் பொதுவுடமைக் கட்சி அமர்ந்தது.

## 1954

சென்னை மாவட்ட பொதுவுடைமைக் கட்சியின் செயற்குழுக் கூட்டத்தில், கட்சியின் எதிர்காலம் பற்றி கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்ந்து கருத்து மோதல்கள் ஏற்பட்டதாகவும், விளைவாக ஒரு குழுவினர் கட்சியை விட்டு வெளியேறி விட்டதாகவும் செய்தி வெளியாயின. அதன் அடிப்படையில் கட்சியைவிட்டு வெளியேறிய வர்கள் பட்டியலில் கவிஞர் தமிழ்ஒளியின் பெயரும் இடம் பெற்றிருந்தது.

முற்போக்கு எழுத்தாளர் தோழர் விந்தன் 'மனிதன்' என்ற பெயரில் திங்கள் இதழ் ஒன்றைத் தொடங்கினார். தமிழ்ஒளி அதில் பங்கேற்றார்.

'மனிதன்' அலுவலகம் பழைய சேத்துப்பட்டில் இருந்தது. அதனால் அமைந்தகரை பகுதியில் வசித்துவந்த தோழர் ரகுபதியைத் தினமும் சந்திப்பதை வழக்கமாகக் கொண்டார் தமிழ்ஒளி.

தோழர் ரகுபதியின் நண்பர் சுப்பிரமணியமும் தோழர் சஞ்சீவியும் இணைந்து அங்கே தனி அறை ஒன்றில் வசித்து வந்தனர். அவர்கள் தமிழ்ஒளியின் கவிதையில் ஈடுபாடு உள்ளவர்கள் என்பதை ரகுபதி

அறிவார். ஒரு மாலைப்போதில் தமிழ்ஒளியுடன் அவர்கள் அறைக்குச் சென்றார் ரகுபதி.

'இவர்தான் கவிஞர் 'தமிழ்ஒளி' என அவர்களுக்கு அறிமுகம் செய்துவைத்தார்.

'வீராயி' காவியம் வாயிலாகத் தமிழ்ஒளியை அறிந்திருந்த அந்த நண்பர்கள் கவிஞரை நேரில் கண்டதும் வியப்பு மேலிட மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்.

'கவிஞருக்காக அறை தேடிக் கொண்டிருக்கிறேன். அதுவரை உங்களுடன் தங்கியிருக்க அனுமதிக்க வேண்டும்' என தோழர் ரகுபதி வேண்டுகோள் விடுத்தார்.

அவர்களும் மறுக்காமல் ஒப்புக் கொண்டனர். அன்று முதல் அறைத் தோழரானார் 'தமிழ்ஒளி'.

மறுநாள் காலை, தம்மிடமிருந்த கையெழுத்துப் படியினை அவர்களுக்கு வாசித்துக் காட்டினார் தமிழ்ஒளி.

முன்னர் தாங்கள் படித்திருந்த தமிழ்ஒளி கவிதைகளுக்கு இது முற்றிலும் மாறுபட்டிருந்ததை அவர்கள் உணர்ந்தனர்.

'இது இசை நாடகம். தலைப்பு, 'விதியோ, வீணையோ?' சிலப்பதிகாரத்தில் வரும் 'வேனிற்காதையை' அடிப்படையாக வைத்து எழுதி வருகிறேன்' என்றார் தமிழ்ஒளி.

'கேட்க இனிமையாக இருக்கிறது. எல்லாமே சந்தப் பாக்களா?'

'ஆமாம் புதிய சந்தங்கள். நூல் முழுமை பெறவில்லை. இதை எழுதி முடிக்கும் வரை இங்கே தங்கியிருக்க நீங்கள் உதவ வேண்டு'மென்றார் தமிழ்ஒளி.

தமிழ்ஒளி அறைக்கு வந்தபோது, பெட்டி, படுக்கை, ஏன், மாற்று உடைகூட கொண்டு வரவில்லை. வினவியபோது, ''எது எங்கேயிருக்கிறது என்பது கூட நினைவில் இல்லை'' என்றார்.

கவிஞர் அளித்த பதில் அவர் வாழ்ந்துவந்த நிலையை ஓரளவுக்குப் புரிய வைத்தது. தாங்கள் உதவுவதாக உறுதியளித்தனர்.

'கவிஞர், அமைதியாக அறையில் அமர்ந்து எழுத்துப் பணியில் ஈடுபடுவார் என ஆவலுடன் எதிர்பார்த்தனர். அப்படி நிகழவில்லை. அவரைக்காண கட்சித் தோழர்கள் வருவது வழக்கமாயிற்று. அவர்களுடன் கருத்துப் பரிமாற்றம் நிகழ்வதும், வெளியில் சென்று வருவதும் தவிர கவிதைப் படைப்பில் அவர் கவனம் திரும்பவில்லை




## 1955

தமிழ்ஒளியின் இந்தப் போக்கு கண்டு, நண்பர்கள் சஞ்சீவியும் சுப்பிரமணியமும் வருத்தமடைந்தனர். தமிழ்ஒளிக்கு நாம் காட்டும் ஆதரவு அவருடைய வளர்ச்சிக்குப் பயன் தருவதாயில்லை. அறையில் தங்கி எழுதுவதைத் தவிர்த்து வந்த கவிஞருக்கு உதவி புரிவதும் வீணான செயல் என்ற முடிவிற்கும் அவர்கள் வர நேர்ந்தது. அறையைக் காலி செய்துவிடப் போவதாக கவிஞரிடம் கூறிவிட்டார் சுப்பிரமணியம்.

சங்கடமான நிலையில் சஞ்சீவியை அணுகினார் கவிஞர். அவர் உதவுவதாக உறுதியளித்து புதிய அறையும் ஏற்பாடு செய்தார்.

'எழுதுவதற்கு மட்டுமே அறையைப் பயன்படுத்த வேண்டும். தோழர்கள் வருகைத் தொல்லையைத் தவிர்க்க வேண்டுமென' நிபந்தனையும் விதித்தார் சஞ்சீவி.

கவிஞர் எழுதத் தொடங்கினார். 'விதியோ, வீணையோ?' இசை நாடகம் எழுதி முடிக்கப்பட்டது.

அவருடைய நண்பர் பூவை எஸ். ஆறுமுகம் வாயிலாக நூலின் பதிப்புரிமை புதுமை பிரசுரம் 'பெண்ணாடம் இராமசாமி'க்கு அளிக்கப்பட்டது.

பணம் கை வந்ததும் தோழர்களுடன் மீண்டும் உலாவரத் தொடங்கினார் கவிஞர். மேற்கொண்டு எழுதுவதில் கவனம் செலுத்த வில்லை. சஞ்சீவி வலியுறுத்தியபோது, புதிய காவியம் படைக்க பல கதைக் கருக்கள் உள்ளதாக மட்டும் கூறினார். ஆனால் எழுத முனைய வில்லை. தொடர்ந்து பல நாட்களாக, கவிஞர் அறைக்கே வரவில்லை என்பதும் ஏமாற்றமளித்தது. கவிஞர் எங்கேயிருக்கிறார் என்ற தகவலும் இல்லாததால் அறையைக் காலி செய்துவிட்டார் சஞ்சீவி.

## 1956

சரியாக ஆறு மாதங்களுக்குப் பிறகு வந்த ஒரு தகவல் சஞ்சீவியை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

''கவிஞர் பாண்டிபஜாரில் பைத்தியமாக அலைகிறார்'' என ஒரு ஓட்டல் தொழிலாளி தகவல் சொல்லிப் போனார்.

அமைந்தகரை தோழர் ஒருவரை உடன் அழைத்துக் கொண்டு, பாண்டிபஜாரில் அலைந்து கொண்டிருந்த கவிஞரைக் கண்டுபிடித்தார் சஞ்சீவி.

'ஏதோ பயத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சி அவரைத் தடுமாற வைத்துவிட்டதாக உடன் வந்த தோழர் சொன்னார்.

சஞ்சீவிக்கு அது விளங்கவில்லை.

'பயமுறுத்தியவர் யார், ஏன், பயமுறுத்தப்பட்டார்' என்பதையெல்லாம் இரு தினங்களுக்குப் பிறகே அவரால் தெரிந்து கொள்ள முடிந்தது.

கவிஞரை ஆட்டோவில் அமர்த்தி, அவரைப் பத்திரமாக திருவொற்றியூர் 'தியாகு'விடம் சேர்ப்பிக்குமாறு கூறி அந்தத் தோழரிடம் பணம் கொடுத்து அனுப்பி வைத்தார்.

பின்னர், அடிக்கடி திருவொற்றியூர் சென்று கவிஞரை சந்தித்து நலன் கேட்டு வந்தார் சஞ்சீவி. சரியாக இரண்டு மாதகாலம் திருவொற்றியூர் தோழர்கள் அதிக அளவு அன்பு பாராட்டி கவிஞரை நலம் தேற்றியுள்ளனர்.

அப்படியும் மனதில் பதிவான பயமும் பீதியும் கவிஞரை விட்டு அகலவில்லை. கட்சித் தோழர்கள் பலருடனும் பழையபடி தொடர்பு கொள்ள வேண்டுமென அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தவர், ஒருநாள் யாருக்கும் தெரியாமல் இடம்பெயர்ந்து விட்டதாகவும் திருவொற்றியூர் தோழர்கள் சஞ்சீவியிடம் கூறினர்.

**1957**

ஒரு மாலைப்போதில், சஞ்சீவியின் அங்காடிக்கு வருகைபுரிந்தார் தமிழ்ஒளி. அவரை வியப்புடன் நோக்கி, ஆர்வமுடன் வரவேற்றார். இருக்கையில் அமர்ந்ததும் புதிய ஒளிமுகத்துடன் தோன்றிய தமிழ்ஒளியை உற்றுப் பார்த்தார். அவரைப் பற்றி தனக்கிருந்த கவலைகள் மெல்ல விலகிச் செல்வதை சஞ்சீவி உணர்ந்தார். தமிழ்ஒளி பேசத் தொடங்கினார்.

'சஞ்சீவி சார், நான் முன்னைவிட பன்மடங்கு ஆற்றலுடன் எழுந்துள்ளேன். புதிய காவியம் படைக்கப் போகிறேன்.'

'மகிழ்ச்சி அய்யா, மெத்த மகிழ்ச்சி... நினைத்ததைச் செய்யுங்கள்.'

'மாதவியின் வரலாற்றை காவியமாகப் பாடப்போகிறேன். நீங்கள்தான் உதவ வேண்டும்.'

ஏதோ ஒரு விபத்திலிருந்து மீண்டெழுந்த மனிதன் தன்னுடைய வேட்கையை வீறுடன் விளம்புவதுபோல அவர் பேசுவதைக் கேட்டுக்

கொண்டிருந்த சஞ்சீவி, 'சரி, என்னால் முடிந்ததைச் செய்கிறேன்' என்றார்.

கவிஞர் உற்சாகமடைந்தவராக புறப்பட்டுச் சென்றார்.

அடுத்தடுத்து இரு தினங்கள் வந்து கொண்டிருந்தார் கவிஞர். 'அறை அமைத்துக் கொடுப்பது பற்றி சஞ்சீவி அதிகம் யோசித்தார். பழைய அனுபவங்கள் நினைவில் நிழலாடின.

'சார், யோசிக்க வேண்டாம். முன்னே நடந்த எதுவும் இனி நடக்காது. என்னைத் தேடிக் கொண்டு யாரும் வரமாட்டார்கள். நானும் யாரையும் தேடி வெளியில் செல்லமாட்டேன். 'மாதவி காவியத்தை' எழுதி முடிக்கும்வரை ஓயமாட்டேன்.'

உறுதிபட மொழிந்தார் தமிழ் ஒளி.

அப்போதைய சூழலில் தனி மனிதர்களுக்கு 'அறை' கிடைப்பதில் சிரமம் இருந்தது. உள்ளூர்க்காரர் என்ற செல்வாக்கும் எடுபடவில்லை. தமிழ்ஒளி சொன்னார்:

''நான், உங்கள் அங்காடியில் இருந்துகொண்டே இரவு நேரங்களில் எழுதுகிறேன். மற்றதை உங்கள் சவுகரியம்போல் செய்யுங்கள்''

சஞ்சீவி ஒப்புக் கொண்டார்... ஒரு விடுதியில் உணவுக்கு ஏற்பாடு செய்தார்.

கவிஞர் விரும்பிக் கேட்ட நூல்களை வாங்கிக் கொடுத்தார். எழுது பொருள்களும் குவிந்தன. காலைச் சிற்றுண்டியை முடித்ததும் வெளியே புறப்பட்டுவிடுவார்.

'சென்னை நகருக்கு மேற்கே, இன்று 'அண்ணாநகர் அமைந்துள்ள இடம். அந்நாளில் பரந்த வயல் வெளியாக விளங்கியது. ஆங்காங்கே மரங்கள் வளர்ந்து தோப்பாகத் தோற்றமளிக்கும் ஓரிடத்தை அவர் தேர்வு செய்தார்.

அவ்விடத்தில் மின்கம்பம், அதை ஒட்டி மோட்டார் பம்ப்செட் பொருத்தப்பட்டுள்ள அறை. கிணற்றை ஒட்டிய சிமெண்ட் தரை. ஆள் நடமாட்டம் அதிகமில்லாத அவ்விடத்தில் இளைப்பாற வரும் பறவைகளின் பாட்டு எப்போதும் மெல்லிசையாய்த் தவழ்ந்து கொண்டிருக்கும்.

தமிழ்ஒளி தினமும் பகல் உணவை முடித்துக்கொண்டு அங்கே சென்று அமர்வார். தனிமையில் அமர்ந்து தியானம் செய்வது போல சிந்தனையில் ஆழ்ந்துவிடுவார்.

புதிய கற்பனைகள், புதிய உவமைகள், புதிய சந்தங்கள் பலவாக உள்ளத்தில் கருக்கொண்டு உருவாகி கலைவடிவம் பெறும்.

இருட்டு விரட்ட அவர் எழுந்துவருவார். இரவு உணவை முடித்துக்கொண்டு அங்காடிக்குள் நுழைவார். அவர் வரும்நேரம், அங்காடி மூடும் நேரமாகவே இருக்கும்.

பணியாளர்களை அனுப்பிவிட்டு, சஞ்சீவி வீடு சென்று உணவருந்தி திரும்புவார். தமிழ்ஒளி இரவெல்லாம் எழுதிக் கொண்டிருப்பார். அவருக்குக் காவலாக சஞ்சீவி வெளியில் படுத்துக்கொள்வார்.

ஏறத்தாழ ஓராண்டுக்காலம், இதுவே, அன்றாட நிகழ்வாக இருந்து வந்தது.

**1958**

இந்தச் சூழலில் எழுதத் தொடங்கிய 'மாதவி காவியத்தை' அங்காடி காப்பியம் என்பார் தமிழ்ஒளி.

புகார் காண்டத்தை எழுதி முடித்த நிலையில், கோவலன் உரைத்த ஒரு வெண்பா, உருவகக் காப்பியம் எழுதக் 'கரு' வாயமைந்தது. அதனை ஏற்று 'கண்ணப்பன் கிளிகள்' காவியத்தை ஆர்வமுடன் எழுதி முடித்தார்.

மாதவி காவியம் முழுமைபெறும் நிலையில், பழைய நண்பர் ஒருவரை அவர் சந்திக்க நேர்ந்தது. அந்த நண்பர், அச்சகம் நிறுவி, பதிப்பகம் தொடங்கப் போவதாகவும் ஆர்வமுடன் கூறினார்.

கவிஞர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. 'மாதவி காவியம்' வெளிவந்தால், தமிழுலகம் தன்னை முழுமையாக அறிந்துகொள்ளும் எனப் பெருமிதமுற்றார்.

அந்த நண்பர் அச்சகம் நிறுவியபின், பதிப்பகம் தொடங்காமல், 'திரை உலகம்' தொடர்பான ஏடு ஒன்றை வெளியிடும் முயற்சிகளில் இறங்கிவிட்டார்.

சிறுபிள்ளைகளுக்கு ஆசை வார்த்தை கூறி ஏமாற்றுவதைப்போல அவர் நடந்துகொண்டது தமிழ்ஒளியை ஏமாற்றமடையச் செய்தது.

அப்போது, புதிய படைப்பாக 'மாதவி காவியம்', 'கண்ணப்பன் கிளிகள்' என்ற இரண்டு கையெழுத்துப் படிகள் கைவசமாயின. தமிழ்ஒளியின் உள்ளத்தில் பல 'கதைக் கரு'கள் உருவாகியிருந்தன. அடுத்து என்ன எழுதப் போகிறீர்கள் என சஞ்சீவி கேட்டார்.

மாதவியின் மகள் 'மணிமேகலை, இளமையில் துறவுபூண்ட வரலாறு, புத்தமதத் தலைவர்கள் செய்த சதியின் விளைவு என்றும், அதை மறுத்து 'மணிமேகலை' வரலாற்றை காதல் காவியமாகப் படைக்க வேண்டுமென்பது ஒரு திட்டம் என்றும்;

அடுத்து, சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ள கோவலன் முற்பிறவி வரலாற்றைப் புதிய நோக்கில் காவியமாகப் படைக்கலாமென்பது மற்றொரு திட்டம் என்றும் தமிழ்ஒளி கூறினார்.

இதனிடையே, 'மணிமேகலை'க்கு பிள்ளைத் தமிழ்பாடி 'மாதவி காவியத்தில்' சேர்க்க வேண்டுமென்றும் கருதினார். அவர் கேட்டுக் கொண்டபடி, குமரகுருபரரின் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' நூலை வாங்கிக் கொடுத்தார் சஞ்சீவி.

அந்நூலை ஆர்வமுடன் படித்தார். அதில் தன்னுடைய பெயரை எழுதிவிட்டு மேசைமேல் வைத்துவிட்டார். அடுத்து ஒருநாள் சஞ்சீவியுடன் 'பாரி நிலையம்' சென்றார். அப்போது வெளியாகியிருந்த அறிஞர் ப.ராமசாமி எழுதிய 'போதிமாதவன்', 'தம்மபதம்' நூல்களை வாங்கினார்.

அங்காடிக்குத் திரும்பியதும், 'போதிமாதவன்' நூலை படிக்கத் தொடங்கினார். இரு தினங்களுக்குப்பின், புத்தர் வரலாற்றை காவியமாகப் பாடலாம்போல் தோன்றுகிறது' என்றார் தமிழ்ஒளி.

'நல்ல முடிவுதான், எழுதுங்கள்' என்றார் சஞ்சீவி. கவிஞரும் எழுதத் தொடங்கினார்.

அற்புதமான சந்தங்களுடன் காவியம் எழுந்தது. கபிலை நகரின் சிறப்பும், உரோகிணி ஆற்றின் பெருமையும் கவிதையில் களிநடம் புரிந்தன.

அன்னை மாயாதேவி நோன்பு நோற்று தவப்புதல்வனைப் பெற்றெடுக்கும் வரை காவியம் வளர்ந்து நின்றது.

'எழுதுவதைத் தொடருங்கள்' என வலியுறுத்தினார் சஞ்சீவி. ''மாதவிகாவியம்' வெளிவரட்டும், பிறகு புத்தர் காவியத்தைத் தொடங்கலாமென்றார் கவிஞர்.

தடைப்பட்ட எழுத்துப்பணி இறுதிவரை தொடராமலே போயிற்று.

இந்தக் கால கட்டத்தில் நிகழ்ந்த ஒன்றையும் இங்கே குறிப்பிட வேண்டும். 'விடுதலை' இதழின் ஆசிரியர் குத்தூசி குருசாமி அவர்களை சந்தித்தார் கவிஞர். ''சிங்கப்பூர் தமிழ் முரசு ஏட்டிற்குத்

துணை ஆசிரியர் தேவையாம். விருப்பம் இருந்தால் சொல்லுங்கள் ஏற்பாடு செய்கிறேன்'' என்றார் ஆசிரியர்.

கவிஞர் சட்டென எழுந்து நின்று, ''என்னால் முடியாது சார். சென்னையை விட்டுச் செல்லும் எண்ணமே எனக்கில்லை'' எனச் சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டார் கவிஞர்.

**1959**

புரசைவாக்கத்தில் நடைபெற்றுவந்த திருமுருக கிருபானந்த வாரியாரின் 'கம்பராமாயண' தொடர் சொற்பொழிவு நிகழ்ச்சிக்குச் சென்று வந்தார் தமிழ்ஒளி. இரவு நேரம். அப்போது சஞ்சீவி நூல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார்.

'என்ன படிக்கிறீர்கள்?'

'அம்பிகாபதிக் கோவை'

'எப்படியிருக்கிறது?

'நன்றாகவே இருக்கிறது'. ஆனால் படித்ததையே திரும்பத் திரும்பப் படிப்பதுபோன்ற உணர்வும் ஏற்படுகிறது.'

'அது, அப்படித்தான். ஒருதுறைச் செய்யுள். அதற்குரிய இலக்கணத்தைப் பேண வேண்டுமல்லவா?' அதுதானே மரபு.

கவிஞர் ஒரு தாளை எடுத்து எழுதினார். அதைப் படிக்கக் கொடுத்தார். அதில் இரண்டு 'கட்டளைக் கலித்துறை'ப் பாடல்கள் இருந்தன. வியப்புற்ற சஞ்சீவி,

'சார், இந்தப் பாடல்கள் இந்த நூலில் இல்லையே'

'எப்படியிருக்கும். இது நான் எழுதிய பாடல்கள்'

'சார், கட்டளைக் கலித்துறை'க்கு ஏதோ, தனி இலக்கணம் சொல்லுவார்களே'.

'என்ன இலக்கணம், 'நேர் அசை பதினாறு', 'நிறை அசை பதினேழு' தானே! எண்ணிப் பாருங்களேன்...'

சஞ்சீவி எண்ணிப் பார்க்கவில்லை. படிக்கும்போதே அது விளங்கிவிட்டது.

அடுத்து இரு தினங்களில் அறுபதுக்கும் மேற்பட்ட 'கட்டளை கலித்துறை'ப் பாக்களை எழுதி முடித்து, 'உயிர்ஒலி' என்ற தலைப்பிட்டு சஞ்சீவியிடம் படிக்கக் கொடுத்தார். பாடல்கள் உயிர் ஒலியாக, உணர்ச்சி ஒலியாக, தமிழ்ஒலியாக, ஓங்கி ஒலித்தன.

இராமாயணத்தில் தசரதன் சாப வரலாற்றைக் கூறும் பகுதியில், சலபோசன முனிவர் கதை உண்டல்லவா? அந்தக் கதையைத்தான் 'உயிர்ஒலி' என்ற தலைப்பில் கவிஞர் உயிரோவியமாக்கியிருந்தார்.

கண் தெரியாத தன் பெற்றோர்களுக்குத் தண்ணீர் எடுத்துச் செல்ல வந்த சுரோசனன், வேட்டையாட வந்த தசரதன் எய்த அம்பு தைத்து உயிர்நீத்தான். அதனை அறிந்த சலபோசன முனிவர், தசரதனுக்குச் சாபமிடுகிறார்.

இந்த உருக்கமான கதையை உயிர்த்துடிப்புடன் கட்டளைக் கலித்துறைப் பாக்களில் எழுதியிருந்தார் கவிஞர்.

'கலைமகள்' ஆசிரியர் திரு.கி.வா. ஜகந்நாதன் அவர்களிடம் 'உயிர்ஒலி'யை ஒப்புவித்து 'கலைமகளில்' தொடராக வெளியிடுமாறு கேட்டுக் கொண்டார்.

அதைப் படித்துப் பார்த்த கி.வா.ஜ. 'கலைமகள்' ஏட்டில் கவிதைத் தொடர் வெளியிடுவதில்லை. 'உயிர் ஒலியை, மேலும் விரிவுபடுத்தி எழுதி வாருங்கள்' நூலாக வெளியிட ஆவன செய்கிறேன்' என்றார்.

இது, தமிழ்ஒளிக்கு ஏமாற்றமளித்தது. சில தினங்கள் 'உயிர்ஒலி' மேசை அறையில் அடங்கிக் கிடந்தது. பின்னர் ஒரு நாள் 'உயிர்ஒலி'கையெழுத்துப் படிகள், சிதைந்து சிறு சிறு காகிதத் துண்டுகளாகத் தரையில் சிதறிக் கிடந்ததைப் பார்த்துப் பதைத்துப் போனார் சஞ்சீவி.

அற்புதமான கவிதைப் படைப்பைக் காப்பாற்றத் தவறி விட்டோமே என வருந்தினார்.

'உயிர்ஒலி'க்கு நேர்ந்த கதி மற்ற படைப்புகளுக்கும் நேர்ந்துவிடக் கூடாது' என்பது சஞ்சீவியின் கவலையாயிருந்தது.

தமிழ்ஒளியின் பால் நன்மதிப்பு கொண்டிருந்த பதிப்பாளர்களும், கவிதை நூல்களை வெளியிட ஆர்வம் காட்டாததால், உரைநடையில் அவருடைய கவனம் திரும்பியது.

திருக்குறள் 'கடவுள் வாழ்த்து' பாக்களை ஆய்வுசெய்து 'திருக்குறளும் கடவுளும்' என்ற தலைப்பில் ஒரு நூலும், 'சிலப்பதிகார நூல் வடிவம், காவிய வடிவமா, நாடக வடிவமா? என ஆய்வுசெய்து 'சிலப்பதிகாரம் காவியமா, நாடகமா? என்ற தலைப்பில் மற்றொரு நூலும் அவர் படைத்தார். அதுவன்றி சிறுகதைகளும், குட்டிக் கதைகளையும், அவர் எழுதினார். அவை ஏடுகளில் வெளிவந்தன. நூல் வடிவில் பதிப்பகங்கள் வெளியிட்டன.

**1960**

புரசைவாக்கத்தில் ஒரு விடுதியில் தங்கியிருந்தார் கவிஞர். அவ்வப்போது சஞ்சீவியைக் காண அமைந்தகரை வருவார். இரவு வெகுநேரம் இருந்துவிட்டு, பின்னர் விடுதிக்குச் செல்லுவார்.

ஒருநாள், 'மாதவி காவியத்தின்' கையெழுத்துப் படியினைக் கொண்டுவந்து 'இது இங்கேயே இருக்கட்டும். இந்த இடம்தான் இதற்குப் பாதுகாப்பான இடம். தேவை வரும்போது எடுத்துக் கொள்ளுகிறேன்' என்றார்.

'ஏன், என்ன விவகாரம்?' என்றார் சஞ்சீவி.

'ஒன்றுமில்லை. இது ஊர்ப்பயணம் புறப்பட்டு எல்லா பதிப்பகங்களையும் எட்டிப்பார்த்துத் திரும்பிவிட்டது'

தமிழ்ஒளியின் பதிலுரை அவருக்கிருந்த மனச் சோர்வையே வெளிப்படுத்தியது.

அது குறித்து சஞ்சீவி யோசிக்கத் தொடங்கினார். 'மாதவி காவியத்தின்' பதிப்புரிமைக்காக ஒரு தொகையைக் கவிஞருக்குத் தாம் அளிப்பதென்றும், அந்நூலை வேறு யாரேனும் பதிப்பிக்க முன்வந்தால், அத்தொகையைப் பெற்றுக்கொண்டு ஏட்டுப் படியைக் கொடுத்துவிடுவதென்றும் முடிவு செய்தார் சஞ்சீவி. இதுகுறித்து ஆசிரியர் விந்தனுடனும் கலந்து பேசினார். பிறகு, தன் கருத்தினை தமிழ்ஒளியிடம் எடுத்துச் சொல்லி, இது ஒரு தற்காலிக ஏற்பாடுதான். உங்களுக்குச் சம்மதம் என்றால் ஒப்புதல் கூறுங்கள் என்றார்.

தமிழ்ஒளி ஒப்புக்கொண்டார். ஒரு வழக்கறிஞரிடம் விஷயத்தை சொல்லி பத்திரம் எழுதித் தரும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது.

அடுத்த நாளே பத்திரத்தில் கையொப்பம் இட்டு கவிஞர் பணத்தைப் பெற்றுக் கொண்டார். ஆசிரியர் விந்தனும், நண்பர் மு. கிருஷ்ணசாமியும் சாட்சிக் கையெழுத்திட்டனர்.

அப்போது சஞ்சீவி சொன்னார்:

'ஐயா, இந்த காவியத்தை என்னுடைய அங்காடியில் தங்கியிருந்து எழுதினீர்கள். இது சிறப்பாக வெளி வரவேண்டுமென்பதே என் விருப்பம். உணர்ச்சி வசப்பட்டு 'உயிர்ஒலி'யை அழித்ததைப்போல, இந்நூலுக்கும் அழிவு வந்துவிடக் கூடாதென்பதே என் கவலை. அதன் பொருட்டே இந்த ஏற்பாடு.

கவிஞர் பணத்தைப் பெற்றுக்கொண்டதும், தான் கேரளா செல்ல விருப்பதாகவும், அங்கே நண்பர்களுடன் தங்கியிருந்து புதிய காவியம் ஒன்றை எழுதிவரத் திட்டமிட்டுள்ளதாகவும் கூறினார்.

## 1961

தமிழ்ஒளியைக் காண அவருடைய அருமைத் தாயார் புதுவையிலிருந்து சென்னை வந்தார்.

அவர் எடுத்துவந்த முகவரியில் சஞ்சீவி மட்டுமே இருந்தார். தமிழ்ஒளி இருப்பிடத்தை அவராலும் கண்டறிய முடியவில்லை.

ஒரு வாரகாலம், பத்திரிகை அலுவலகங்கள் பலவற்றுக்குச் சென்று தேடியும் கவிஞரைக் காணவில்லை. அந்நிலையில் அம்மையாரின் வழிச்செலவிற்குப் பணம் கொடுத்து அவரைப் புதுவைக்கு அனுப்பி வைத்தார் சஞ்சீவி.

இந்தக் காலகட்டத்தில், தமிழ்ஒளி எங்கிருந்தார், என்ன நடந்தது என்பதை யாராலும் அறியமுடியவில்லை.

ஆனால், கொடூர குணம் படைத்த சில பேர்வழிகள் பரப்பிய கற்பனைச் செய்திகள் நண்பர்களை அதிர வைத்தது உண்மையேயாம்!

## 1962

இந்த ஆண்டில் அவர் எழுதிய உரைநடை நூல்கள் சில வெளிவந்தன. நாளேடுகளிலும், இலக்கிய ஏடுகளிலும் அவருடைய எழுத்துகள் இடம்பெற்றன. சிறப்புமிக்க 'கோசலக்குமரி' குறுங்காவியத்தை இந்தக் காலகட்டத்தில்தான் அவர் படைத்தார்.

கவிஞரை சந்தித்த சஞ்சீவி, ''சார், என்மீது உங்களுக்கு மனக்குறை இருக்கலாம், அந்தக் குறைபாடு, 'மாதவி காவியத்தை' வெளியிட நான் முயற்சி செய்யவில்லை என்பதாகவுமிருக்கலாம்.' 'வாய்ப்பிருந்தால் சொல்லுங்கள், காவியப்படியைத் திருப்பித் தந்து விடுகிறேன். யார் வேண்டுமானாலும் வெளியிடட்டும்' என கவிஞரை நேரில் வைத்தே சொன்னார்.

'வேண்டாம், எத்துணை காலமானாலும் நீங்களே வெளியிடுங்கள்' என அழுத்தமாகக் கூறினார் தமிழ்ஒளி.

**1963**

தமிழ்ஒளி ஆஸ்துமா நோயினால் அல்லல்படுவதாக தகவல் கிடைத்தது. தோழர் சஞ்சீவியும் ஆசிரியர் விந்தனும் சேர்ந்து, ஒரு டாக்டரின் பரிந்துரையின்பேரில் சென்னை பொதுமருத்துவ மனையில் சேர்த்தனர்.

இன்றுள்ளதைப் போன்ற மருத்துவமனை வசதிகள் அன்றிருக்க வில்லை. ஏழை பணக்காரர் எல்லாருக்குமே பொது மருத்துவமனையே புகலிடமாக விளங்கியது.

கவிஞர், அங்கிருந்த சில அசௌகரியங்களைப் பொறுக்க மாட்டாமல், சில தினங்களில் வெளியேறிவிட்டார்.

இரண்டாவது முறையாக, வேறு நண்பர்கள் முயற்சியுடன் 'ஸ்டான்லி பொது மருத்துவமனை'யில் அவர் சேர்க்கப் பட்டிருக்கிறார். அங்கிருந்தும் இரண்டாம் நாளே வெளியில் வந்துவிட்டதும் தெரிய வந்தது.

ஆண்டின் இறுதியில் புதுவையிலிருந்து அவருடைய சகோதரியும் மைத்துனரும் சென்னை வந்தனர். கவிஞர் கடிதம் எழுதினார் போலும்.

அவர் இருந்த இடத்தைக் கண்டுபிடித்து அவரை உடன் அழைத்துக் கொண்டு சஞ்சீவி இருப்பிடம் வந்தனர்.

கவிஞரிடம் இதமாகப் பேசி செலவுக்குப் பணமும் கொடுத்து அவர்களுடன் வழியனுப்பி வைத்தார் சஞ்சீவி.

புதுவை சென்ற கவிஞரை அங்குள்ள நண்பர்கள் 'ஜிப்மர் மருத்துவமனை'யில் சேர்த்துள்ளனர். அங்கிருந்தபடி சஞ்சீவிக்குக் கடிதம் எழுதி பணம் அனுப்புமாறு கேட்டிருந்தார். நண்பர் மு. கிருஷ்ணசாமி மூலம் அவருக்கு உடைகளும், பணமும் அனுப்பி வைத்தார் சஞ்சீவி.

நண்பர் கிருஷ்ணசாமி சென்றபோது மருத்துவமனை படுக்கையில் அவர் இல்லாததும், டாக்டர்கள் சரிவர கவனிக்க வில்லை என்ற கோபத்தில் வெளியேறிவிட்டதாகவும், 'கலைமகள்' ஆசிரியர் கி.வா.ஜ. அனுப்பி வைத்த பணமும் திரும்பிவிட்டதாகவும் அங்கிருந்தவர்கள் தகவல் சொன்னதாக, புதுவை சென்று திரும்பிய நண்பர் கிருஷ்ணசாமி கூறினார்.

**1964**

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் மறைந்தபோது புதுவை சென்றார் சஞ்சீவி. அங்கே, மயானத்தில் சந்தித்த நண்பர்களிடம் 'தமிழ்ஒளி'யின் இருப்பிடம் குறித்து விசாரித்தார். அவர்களால், சரியான முகவரியைத் தர முடியவில்லை.

சஞ்சீவி ஏமாற்றத்துடன் சென்னை திரும்பிய சில தினங்களில், தமிழ்ஒளியும் சென்னை வந்துவிட்டார். அவரைப் பார்த்து அதிர்ந்து போனார் சஞ்சீவி.

ஒடுங்கிய உருவம், கோலூன்றிய நடை. கையில் ஒரு குவளை. தாடியும் மீசையும் வயதுக்கு மீறிய முதிர்ச்சியைக் காட்டியது.

பையில், 'சமநீதி', 'காந்தி வழி' ஏடுகள் இருந்தன. பாரதிதாசன் மறைவு குறித்து அவர் எழுதிய இரங்கற்பாக்கள் அதில் அச்சிடப்பட்டிருந்தன.

'ஜிப்மர்' மருத்துவமனைக்கு நண்பர் கிருஷ்ணசாமி சென்று திரும்பியது பற்றி சஞ்சீவி கூறியபோது,

'சார், தமிழன் மோசமானவன். 'ஜிப்மரில்' ஒரு வட இந்திய டாக்டரிடம் 'நான் ஒரு கவிஞன்' என்றேன். மிகுந்த மரியாதையுடன் நல்லவிதமாக சிகிச்சை அளித்தார். இந்த விவரம் 'தமிழ்பேசும்' டாக்டருக்குத் தெரிந்ததும், என்னை ரொம்பவும் மோசமாக நடத்தினார். அதனைப் பொறுத்துக் கொள்ள முடியாமல்தான் அங்கிருந்து வெளியேறினேன்' என்றார் தமிழ்ஒளி.

தமிழ்ஒளி கூறியது உண்மை என்றாலும், மருத்துவமனைக்கு நாம் சிகிச்சை பெறவே செல்லுகிறோம். அந்த சிகிச்சை சரிவர கிடைக்கிறதா என்றே பார்க்க வேண்டும். மற்றபடி மரியாதை கவுரவம் பற்றி நினைத்துப் பார்ப்பதில் எவ்விதப் பயனும் இல்லை அல்லவா?

'நீங்கள் சென்னையில் இரண்டு முறை மருத்துவமனைகளிலிருந்து சிகிச்சை பெறாமலே வந்துவிட்டீர்கள். இதனால் நோயை வளர்த்துக் கொண்டது தவிர வேறு நன்மை என்ன கண்டீர்கள்.'

சஞ்சீவி சொன்னதை அவர் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

'அய்யா, இப்பவாவது மருத்துவமனையில் சேர்க்கட்டுமா' என்றார் சஞ்சீவி. அதெல்லாம் தேவையில்லை சார். வாரம் ஒருநாள் 'செப்டாமைசின்' ஊசிபோட்டுக் கொண்டால் போதும்' என மறுத்துவிட்டார்.

அமைந்தகரையில் ஒரு விடுதியில், அறை அமர்த்திக் கொடுத்த சஞ்சீவி, வீட்டிலிருந்து இரண்டு வேளை உணவும் கொண்டு வந்து கொடுத்தார்.

அப்போதும்கூட, அறையில் தங்கியிருந்து அவர் ஓய்வு கொள்ளவில்லை. சைக்கிள் ரிக்ஷா அமர்த்திக் கொண்டு தினமும் சென்னையை வலம் வந்தார். பகல் முழுவதும் எங்கெல்லாமோ சுற்றி எல்லா நண்பர்களுக்கும் முகதரிசனம் தந்து இரவு ஏழு மணிக்குமேல் தான் அங்காடிக்குத் திரும்புவார்.

வந்ததும் ரிக்ஷாகாரரிடம் தகராறு மூளும். இவர் பேசிய தொகை 'இன்னது' என்பார். அவர் சுற்றிய இடங்களை விவரிப்பார். கேட்ட தொகையைக் கொடுத்து ரிக்ஷாகாரரை அனுப்பி வைப்பார் சஞ்சீவி.

நலிவுற்ற நிலையில் தமிழ்ஒளி சென்னை வந்தது சஞ்சீவிக்கு மிகுந்த வருத்தமும், மனவேதனையும் அளித்தது.

அந்தக் கோலத்தில் தமிழ்ஒளியைப் பார்த்த சில நண்பர்கள் கண்டுகொள்ளாமற் போனதும், சிலர் முகம் கொடுத்துப் பேசத் தயக்கங்காட்டியதைக் கண்டும் கேட்டும் அதிர்ச்சியுற்றார் சஞ்சீவி.

தோழர் சீனிவாசமூர்த்தி தமிழ்ஒளிக்கு நண்பர். 'சமநீதி' ஏட்டின் பொறுப்பாசிரியர். சென்னை வந்த தமிழ்ஒளி, 'சமநீதி' அலுவலகம் சென்றாராம். பாரதிதாசன் மறைவு குறித்து 'இரங்கற்பா' எழுதித்தருமாறு அவர் கேட்க, 'கவிஞர் கோமான்' என்ற தலைப்பில் இவர் எழுதிய கவிதையை உடனடியாக அச்சில் ஏற்றி 'சமநீதி'யைச் சிறப்பித்திருக்கிறார் அவர். அத்துடன் கவிஞருடைய இறுதியை யூகித்தவராக அவரை புகைப்படம் பிடிக்கவும் ஆவன செய்திருக்கிறார். அந்தப் புகைப்படத் தோற்றமே, கவிஞர் மறைவின்போது 'சமநீதி' ஏட்டின் முகப்பில் இடம்பெற்றது. அந்தப் புகைப்படமே இன்றும் தமிழ்ஒளியை அடையாளப் படுத்தும் புகைப்படமாக இருந்து வருகின்றது.

கவிஞர் சென்னை வந்து ஒரு மாதகாலம் ஆகிவிட்டது. அவரை அழைத்துப்போக, அவருடைய சகோதரியும் மைத்துனரும் மீண்டும் வந்தனர்.

'இனி, சென்னையில் இருந்து சாதிக்க ஒன்றுமில்லை. ஊருக்குப் போய் உறவினர்களுடன் அமைதியாக இருங்கள்' என இதமாக எடுத்துச் சொல்லி கவிஞரை அவர்களுடன் வழியனுப்பி வைத்தார் சஞ்சீவி. அதுவே இருவர்க்கும் இறுதி சந்திப்பாக அமைந்தது.

**1965**

சென்னையினின்றும் புதுவை சென்ற கவிஞர், அங்கே பத்துமாத காலங்கள் நோயுடன் போராடியிருக்கிறார். மன உளைச்சலுக்கு ஆட்பட்டு தனிக்குடிலில் இருந்து அழுது புரண்டு ஆவி சோர்ந்திருக்கிறார். அந்தத் துயர நாள் 29.3.1965.

அந்த மாக்கவிஞன் மறைவுச் செய்தியை முதலில் வெளியிட்ட பெருமை 'கலைமகள்' ஏட்டிற்கே உரியது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**வரலாற்றுக் குறிப்பில் விடுபட்டச் செய்தியாக இரண்டைக் கூறலாம்.**

கவிதையைத் தன் இலட்சியமாக ஏற்றுத் தனிமையில் உழன்று வந்த தமிழ்ஒளியை, இல்லறத்தில் சேர்க்க உறவினர்களும் நண்பர்களும் முயன்று தோற்றது ஒன்று.

பாழாய்ப்போன காதல் நினைவுகள் அவரைப் பாடாய்ப் படுத்தி, காச நோய்க்கு இரையாக்கியது மற்றொன்று.

கவிஞர், தன்னை 'போராடி வாழும் புதுயுகக் கவிஞன்' என ஓர் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார்.

அதுபற்றி இங்கே சொல்லத்தான் வேண்டும். அவர் போராடியது உண்மை. எதற்காகப் போராடினார் என்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் அல்லவா?

இந்தப் புண்ணிய பூமியில், என்ன பாடுபட்டும் அடுத்த வேளை உணவுக்கு உத்தரவாதமின்றி அல்லல்படுகிறார்களே, அந்த உத்தமர்களின் உரிமைக்காகவே அவர் போராடினார்.

அவர் நடத்திய போராட்டம், முடிவில், தனிநபர் போராட்டமாகவே முடிந்துபோனது. காரணம், அவர் பெரிதும் மதித்துப் போற்றி வந்த இயக்கங்கள், அவர் பால் அக்கறை கொள்ளாததும்; அவர் படைத்த இலக்கியங்களை மக்களிடம் கொண்டு செல்ல முன் வராததுமே அவரை சோர்வு கொள்ளச் செய்தது.

ஏழை மக்கள் ஏற்றம்பெற எழுதுகோல் பிடித்தவன், இறுதிவரை ஏழ்மையில்தான் உழலவேண்டும் என்ற நியதிக்கு, அவருடைய வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாய் அமைந்து விட்டதும் கொடுமையான நிகழ்வே.

இத்துணை இடர்பாடுகளுக்கும் மத்தியில், அந்த மாகவிஞர், தனி மனிதராக வாழ்ந்து மிகக் கடுமையாக உழைத்து சாதனை

படைத்துள்ளார் என்பதை அவருடைய படைப்புகளின் பட்டியல் மெய்ப்பிக்கின்றன.

ஒன்பது காப்பியங்கள்; பலநூறு தனிக் கவிதைகள்; இரண்டு குறுநாவல்கள், முப்பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், இருபது ஓரங்க நாடகங்கள், மூன்று மேடை நாடகங்கள் . நூற்றுக்கும் மேற்பட்ட குட்டிக் கதைகள், மூன்று இலக்கிய ஆய்வு நூல்கள் , விமர்சனக் கட்டுரைகள் (நூல் வடிவம் பெறவில்லை) எனப் படைப்புப் பட்டியல் நீளும்.

இந்தப் படைப்புகளில் பலவும், விஜயரங்கம் என்ற இயற்பெயரிலும், 'விஜயன்', 'சிவி.ர', 'தமிழ்ஒளி', 'பாணன்', 'ஜெயங்கொண்டான்' போன்ற பல புனைபெயர்களிலும் ஏடுகளில் இடம் பெற்றுள்ளன.

இத்தனை படைப்புகளுக்காகவும், அவர் ஈட்டிய 'பொருட் செல்வம்' போதுமானதாக இருந்ததா எனில், 'இல்லை'யென்பதே உண்மையாகும். போதுமான அளவுக்குப் பொருள் ஈட்டாமலே வாழ்நாள் முழுவதும் ஏமாற்றங்களை எதிர்கொண்டும், நண்பர்களைச் சார்ந்தும் வாழ்நாள் முழுவதும் விரக்தியுடன் வாழ்ந்தே மறைந்தவர் தமிழ்ஒளி.

இறுதியாக ஒன்று: 'காலத்தால் நிழலடிக்கப்பட்டவர் கவிஞர் தமிழ்ஒளி!' என ஆறுதல் கூறிக் கொண்டிருப்போர் மத்தியில், அவர் தம் கவிதைப் படைப்புகள் காலத்தை வென்று ஒளிர்ந்து கொண்டிருப்பதுதான் மிகத் தெளிவான - உறுதியான உண்மை.

**பின்குறிப்பு:**

தமிழ் ஒளி மறைவுக்குப் பின் புதுவை சென்று, தமிழ்ஒளியின் தந்தை திரு. பொ. சின்னையா அவர்களைச் சந்தித்தார் சஞ்சீவி.

ஏடுகளில் வெளிவந்துள்ள கவிதைகளைத் திரட்டி நூலாக வெளியிட அவரிடம் முறைப்படி அனுமதி பெற்றுவந்தார்.

1966இல் 'தமிழ்ஒளியின் கவிதைகள்' நூலினைச் சிறப்பான முறையில் வெளியிட்டார்.

அடுத்து, பிற பதிப்பகத்தாரின் ஒப்புதலுடன் 'கண்ணப்பன் கிளிகள்', பாடு, பாப்பா!' நூல்களையும் வெளியிட்டார்.

தொடர்ந்து, மறு பதிப்புகள் வெளிவராத நூல்களையும் முறைப்படி பதிப்புரிமை பெற்று புதிய பொலிவுடன் வெளிக்கொண்டு வந்துள்ளார் சஞ்சீவி.

இதுகாறும், தமிழ்ஒளியின் புகழ் பரப்பும் ஒன்பது நூல்களை தமிழ் மக்களின் பார்வைக்கு வைத்துள்ளார் சஞ்சீவி.

இவை மட்டுமன்று-

1998 ஜூன் திங்களில், 'புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்' தோழர் சஞ்சீவியை அழைத்து, 'புதுவைக் கவிஞர் தமிழ்ஒளியின் வாழ்வும், கவிதைப் பணியும்' என்ற தலைப்பில் கருத்துரை வழங்கக் கேட்டது.

அவர் அளித்த தகவல்களின் அடிப்படையில், தமிழ்ஒளியின் கவிதைப் படைப்புகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடும் சீரிய பணியினை அந்நிறுவனம் மேற்கொண்டது.

1998 செப்டம்பர் திங்களில் தமிழ் ஒளியின் 75ஆவது பிறந்தநாள் (பவள) விழாவினை தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தாருடன் இணைந்து நடத்தினார் சஞ்சீவி.

அவ்விழாவில், தமிழ்ஒளி குறித்து தமிழறிஞர்கள் வழங்கிய வாழ்த்துரைகள், கட்டுரைகள், கவிதைகளின் தொகுப்பு நூலாக, 'தமிழறிஞர் பார்வையில் தமிழ்ஒளி' என்ற நூல் வெளியிடப்பெற்றது.

அதனை ஒட்டி 1999 மார்ச் திங்களில் 'புதுவை முற்போக்கு எழுத்தாளர் சங்கம்' தமிழ் ஒளி நினைவு நாள் கருத்தரங்க நிகழ்ச்சி ஒன்றை வெகு சிறப்பாக நடத்தியது.

அவ்விழாவில் நிறைவேற்றப்பட்ட நான்கு தீர்மானங்களையும் ஏற்றுக் கொண்ட புதுவை அரசாங்கம் முதற்கட்டமாக, தமிழ்ஒளியின் பிறந்தநாளை (21.9.1924) நினைவூட்டும் வகையில் 1999 செப்டம்பர் தொடங்கி, இன்றளவும் விழா எடுத்து வருவதும் சிறப்பான செய்தியே.

இறுதியாக, 'புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்' தமிழ்ஒளி கவிதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பினை விரைவில் வெளியிடவுள்ளதும் இனிய செய்தியே!

# 2

## கவிதைப் படைப்புகள்

தமிழ்ஒளியின் கவிதைகளில் ஓசை நயமும், கற்பனை வளமும் சிறப்புற்று விளங்கும். மரபுக்கவிதையில் தேர்ச்சி பெற்ற கவிஞரின் தொடக்க கால படைப்புகள் முற்றிலும் பாரதி - பாரதிதாசன் பாணியில் அமைந்தவை.

எனினும் பிற்காலத்தில் தனக்கென ஒரு தனிப் பாணியை வகுத்துக் கொண்டு கவிதைகள் படைத்து வெற்றி கண்டவர் தமிழ்ஒளி.

'கருத்துகளை சொல்லுவது மட்டுமே கவிதையின் நோக்கமெனில், யாப்பு வகைகள் பல இருக்கத் தேவையிராது. கவிதை ஒரு கலை. அந்த உணர்வோடு இலக்கியம் படைக்கும் கவிஞன், தான் விரும்பும் வண்ணம் கவிதையைக் கையாளும் பொருட்டே யாப்பு வகைகள் பல உருவாக்கப்பட்டன' என்பதும் தமிழ் ஒளியின் கருத்தாக இருந்து வந்தது.

*சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி* போன்ற பழம்பெரும் இலக்கியங்களில் இயன்றுள்ள வண்ணங்களும், கம்பர் கையாண்ட விருத்தப்பாக்களில் தாள லயத்துடன் ஒலிக்கும் சந்தங்களும் அவருக்கு முன் மாதிரியாகத் திகழ்ந்தன என்றும் கூறலாம்.

அகவை இருபத்து இரண்டில் (1947) மூன்று குறுங் காப்பியங்களை வெளியிட்டு பெருமையுற்ற தமிழ்ஒளி, அவ்வளவில் இறுமாந்து இருந்திடவில்லை. மேலும் தேர்ச்சிபெற விரும்பினார். அதன் பொருட்டு, மாணவப் பருவத்தில் கடமைக்காக கற்ற பழந்தமிழ் இலக்கியங்களை மீண்டும் தேடி எடுத்து வாசித்து வந்தார். அந்நிலையில்,

'வெண்பாவிற்குப் புகழேந்தி, விருத்தப்பாவிற்குக் கம்பர்' என்ற வழக்காற்றில் பயின்று வந்த அடை மொழிகளும் அவர் கவனத்தை ஈர்த்தன போலும்.

'தாமும் முயன்று, தமக்கென ஒரு பாணியை வகுத்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணமும் அவருக்கு எழுந்திருக்கக் கூடும்.

இதுகுறித்து, 'யாத்திரை' என்ற தமது கவிதையில் தெளிவுபடக் கூறுவதைக் காணலாம்.

கவிதைக் கலையின் 'தலைமகள்' கொல்லிமலையில் வீற்றிருப்பதாகக் கற்பனை செய்கிறார். அவளை அணுகி, அவளது திருக்கரத்தால் 'பாமாலை' சாற்றிக் கொள்ள அவாவுகிறார். அதன்பொருட்டு கடும் பயணமும் மேற்கொள்ளுகிறார்.

அந்தப் பயணம், நடக்க நடக்க மாளாத தூரமாகத் தொடர்கிறது.

''தொலை காட்டும் கல்வரிசை
தூரம் வெகுதூரம்!
கலை காட்டும் நற்கவிதைக்
கன்னி யிருக்குமிடம்!''

அவள் -

'எத்தனையோ காதலர்க்கு
எண்ணத்தை விற்றுவிட்டாள்!
அத்தனைபேர் நெஞ்சத்தும்
அழியாத பத்தினியாம்!

பத்தினியின் கையணைப்பில்
பாட்டமும் உண்பதற்கு
நித்திரையும் அற்றவனாய்
நீளும் வழிநடந்தேன்!

அந்த வழி, 'கம்பன் நடந்து சென்று கைகண்ட வெற்றிவழி! தெம்பு திராணியற்றோர் தேய்ந்து மடிந்த வழி!

அங்கே-

பாமாலை ஏந்தியவள்
பார்த்திருக்கும் அவ்வழியும்
காமாலை கண்ணருக்குக்
காணாமற் போனதுண்டு!

அதனால், விழி ஏந்தும் ஒளிச் சுடரால் உற்று நோக்குகிறார்.

*நெஞ்ச மலர்க் கொடிதான்*
*நேராய்ப் படர்ந்த வழி*
*அஞ்சாது சென்றிடுவேன்*
*ஆசையிலே தோல்வியில்லை!*

நம்பிக்கையுடன் மேலும் தொடர்கிறார்...

*உழைக்காமல் யாது பயன்?*
*ஓய்ந்தார்க்கு வெற்றியுண்டோ?*
*அழைக்கின்றாள் கொல்லிமலை*
*ஆரணங்கு; செல்லுகின்றேன்! - 1950*

முடிவில், கவிதைக் கலையின் தலைமகள் தரிசனம் அவருக்குக் கிட்டி விடுகிறது. யாத்திரையின் வெற்றியை நமக்கும் அறிவித்துவிடுகிறார். கவிதையும் முற்றுப் பெறுகிறது.

பொதுவாக தமிழ்ஒளியின் இலக்கியப் படைப்புகளை இரண்டு கூறுகளாகப் பகுத்துக்காணலாம்.

முதன்மையானது கவிதை இலக்கியம். அடுத்தது உரைநடை இலக்கியம்.

கவிதைப் படைப்புகளிலும் தனிக்கவிதைகள், காவியப் படைப்புகள் என இருவகையுண்டு.

முதலில் தனிக் கவிதைகளைக் காண்போம்.

**தனிக்கவிதைகள்**

தமிழ்ஒளி ஏழை எளியவர்களுடன் இரண்டறக் கலந்து வாழ்ந்தவர். அங்கே நிலவிய வறுமை, பசிப்பிணி, துன்ப துயரங்கள் அனைத்தும் அவர் உள்மனதில் ஆழமாகப் பதிவாகியிருந்தன.

அம்மக்களிடம் பரிவும், இரக்கமும் கொண்டு அவர்களின் பிரச்சினைகளை இலக்கியத்தில் பதிவு செய்து வந்தார். இயக்கம் சார்ந்து நின்று புரட்சிகரமான கவிதைகளையும் படைத்தார்.

பொதுவாக, உலகு தழுவிய நிலையில், அவர் படைத்த 'மேதின'க் கவிதை ஓர் புதுமை இலக்கியம் என்றே இன்றளவும் பாராட்டப்படுகின்றது.

உழைப்பாளி வர்க்கத்தின் உரிமைக்குரலாக, போர்ப்பரணியாக ஒலிக்கும் புரட்சிக் கவிதை அது. இதோ சில வரிகள்...

''கோழிக்கு முன்னெழுந்து கொத்தடிமை,
போலுழைத்துப்
பாடுபட்ட ஏழைமுகம் பார்த்துப் பதைபதைத்துக்
கண்ணீர் துடைக்கவந்த காலமே நீ வருக!
மண்ணை இரும்பை மரத்தைப் பொருளாக்கி
விண்ணில் மழையிறக்கி மேதினிக்கு நீர்ப்பாய்ச்சி
வாழ்க்கைப் பயிரிட்டு வாழ்ந்த தொழிலாளி
கையில் விலங்கிட்டுக் காலமெலாம் கொள்ளையிட்ட
பொய்யர் குலம் நடுங்கப் பொங்கிவந்த மேதினமே!''

மேதின விழா, சர்வதேச தொழிலாளி வர்க்கத்தின் உரிமைப் பிரகடனத்தை நினைவூட்டும் விழா! அதனை, உலகு தழுவிய நிலையில் உழைக்கும் மக்கள் அணி அணியாகத் திரண்டு கொண்டாடுவதை அற்புதமாக சித்திரிக்கிறார் கவிஞர்.

மே தினத்தின் வலிமை எத்தகையது? படைத்த சாதனையின் தன்மைதான் என்ன? கவிஞர் கூறுவதைக் கேளுங்கள்.

'கந்தல் மனிதரவர் கையில் அதிகாரம்
ஏற்றி வைத்த நின்பெருமை என்னுயிர்க்கும்
மேலன்றோ!
போற்றினேன் வையப் புரட்சியொடு நீ வருக!''

இது, நீண்ட கவிதை... தமிழ் இலக்கியத்திற்கு இது ஒரு புதுமை என்பது மட்டுமல்ல, இந்திய மொழிகளில் மேதினம் குறித்த இதுபோன்ற கவிதை இலக்கியத்தை யாரும் படைத்ததாகத் தெரியவில்லையென்றும், பொதுவுடைமை இயக்க அறிஞர்கள் கூறுகின்றனர்.

இதனைத் தொடர்ந்து தமிழ் மண்ணில் நடைபெற்ற தொழிலாளர் போராட்டங்கள் - குறிப்பாக, நகர் சுத்தி தொழிலாளர், 'ட்ராம்வே' தொழிலாளர், பஞ்சாலைத் தொழிலாளர், துறைமுகத் தொழிலாளர் போன்றோரின் போராட்டங்களையும் முன்னெடுத்து கவிதை படைத்த சிறப்புக்குரியவர் தமிழ்ஒளி.

போராட்டங்கள் தவிர்த்த நிலையில், பொதுவாக இன்னலுறும் ஏழை மக்களின் வாழ்க்கைச் சித்திரமாக அவர் படைத்த தனிக்கவிதைகள் பல தனித்தன்மையுடன் ஒளிர்கின்றன. இங்கே சிலவற்றைக் குறிப்பிட்டுக் கூறலாம்.

பகல் முழுதும் உழைத்த ஏழை மக்கள் ஓய்வு கொள்ளும் இராப்பொழுதை அவர், 'இரவெனுந்தாய்' என அழைத்து பெருமை பாராட்டுகிறார். பாடலின் இறுதி வரிகளைப் படியுங்கள்...

*'படுந்துயரம் போதுமெனக் கதறும் போதில்*
*பறந்தோடி வந்தாய் நீ இரவே! அன்னோர்*
*கடுந்துயரம் நீக்கினாய்! வறண்ட நெஞ்சில்*
*கனிநீரைப் பாய்ச்சினாய்! வாழ்க நீயே!'*

அயர்ந்து உறங்கும் ஏழை மக்களின் ஓலைக் குடிசைகளில் வானத்து விண்மீன்கள் முகம்காட்டுகின்றன, எப்படியாம்?

*'இரவெனும் வறுமையின் கந்தல் உடை - தனில்*
*எண்ணற்ற கண்களோ விண்மீன்கள்?*
*அருந்தக்கூ ழின்றியே வாடுபவர் - கண்ணீர்*
*அருவித் துளிகளோ வான்குன்றிலே!*

-வியப்பூட்டும் உவமைகள் அல்லவா?

அடித்தட்டு மக்களை 'அரிஜனங்கள்' என்றழைத்தார் காந்தியடிகள். அம்மக்கள் ஏற்றம் பெற எத்தனையோ இயக்கங்கள் எழுந்துவிட்டன.

அந்த இயக்கங்களால் அவர்கள் பெற்ற பயன் யாது?

*'அரிஜனத் தொண்டர் என்று ஆகாச வானவெடி*
*சரிகைத் துணிகள் சரம்சரமாய் பொறக்காக!*

*உன்பேர் உரைத்தே உயர்ந்தார்ஒரு சிலபேர்!*
*துன்பக் கொடுஞ்சேற்றில் தூர்ந்தாய் துயருற்றாய்!*
*அன்றிருந்த மேனி அழியாதிருக்கின்றாய்!*
*தொன்றுதொட்டு வந்தசுமை தூக்கி மடிகின்றாய்!*

-எனக் கண்ணீர் வடிக்கிறார். அவர்களின் 'மாசற்ற தியாகத்தை' நமக்கெல்லாம் உணர்த்துகிறார்.

தீபாவளித் திருநாளை எல்லோரும் கொண்டாடுகிறார்கள். வானவெடிகளும், வண்ணமத்தாப்புகளும் இருளின் ஊடே கண்ணைப் பறிக்கின்றன. விடியலை நோக்கிய வேளையில் எண்ணெய்யிட்டு நீராட மனைவி அழைக்கவும், கவிஞர் மனம், வாழ்விழந்த ஏழை நெசவாளர்களை எண்ணி வேதனையடைகிறது.

வண்ண மத்தாப்புக்களினின்றும் தெறித்து விழுந்த ஒரு பொறி, நெசவாளரின் 'இல்ல' நிலையை அவரிடம் எடுத்தியம்புகின்றது.

'நிலவற்ற வானம் நிழலற்ற கானல்
இலகும் சுடரற்ற இல்லமிது காண், ஐயா!''

''ஆடும் தறிகளுயிர் அல்லாடிப் போயிற்று!
பாடுகின்ற பாடல், பதங்கெட்டுப் போயிற்று!
சுற்றுகின்ற ராட்டினங்கள் சுற்றும் கிராமங்கள்
அற்ற குளம்போல் அழிந்தவாழ் வாயிற்று!
தத்துகின்ற நாடா தறிகெட்ட தாயிற்று!
புத்தாடை எங்கே? புகழ்ந்தநூல் பாட்டெங்கே?
பிசகுத் தொழில்செய்து பேதுற்றோம்!
என்றின்று
நெசவுத் தொழில்செய்தோர் நெஞ்சொடிந்து
போயிற்று!''

தீப்பொறி கூறியதைக் கேட்ட கவிஞருக்கு, 'எண்ணெயிட்டு நீராட எப்படி மனம் வரும்?

'பெண்ணே விலகிப்போ! பேசமனம் நாணுதடீ!'-

இந்த மறுப்புரை வாசகர் மனத்தில் மனித நேயத்தைக் தூண்டுகிறதல்லவா?

மழையின் வருகை, நிலத்தின் இன்றியமையாமை என்பதை யாவரும் அறிவோம்.

மழையின் கடுமையால் ஏழை மக்கள் எய்தும் துயரங்களை நெஞ்சுருகப் பாடுவதில் நம் கவிஞர் வல்லவராக விளங்குகிறார்.

'இயற்கை அன்னையின் கோபம்' 'மழைக்காலம்' போன்ற கவிதைகள் படிப்போர் நெஞ்சைப் பற்றியிழுப்பதைக் காணலாம்.

*'கொட்டிடி கொட்டி எழுந்தாள் - அன்னை*
*கோபத்திலே மின்னல் தீயை யுமிழ்ந்தாள்!*
*கட்டிக் கிடந்திடும் மேகம் - எனும்*
*கார்மலை யாம்குடம் ஏற்றிப் புரட்டிக்*
*கொட்டினள் காலவெள் ளத்தை - அவள்*
*கொக்கரித்தாள் திசை எட்டும் நடுங்க!*
*தட்டி யெழுப்பினள் காற்றை - அது*
*தாவி யுருட்டுது மாமரக் காட்டை!*

அண்டம் அதிர ஆர்ப்பரித்த பேய்மழை - பெருவெள்ளமாய்த் திரண்டு வந்து விடியலை விழிப்புறவைக்கிறது. அதனை,

கொடுங்கோலாட்சியை எதிர்த்து மக்கள் தொடுத்த யுத்தம் வெற்றி பெற்றதற்கு ஒப்பிட்டு உவமை கூறுகிறார் கவிஞர்.

இந்த நிகழ்வுக்குப் பிறகு-

*'செக்கச் சிவந்தது வானம் - அன்னை*
*சேல்விழி காட்டினள் வந்தது காலை!'*

எனக் கவிதையை முடிக்கிறார்.

வாடைக் காற்று நம்மை வருத்தும் குளிர்காலத்தில், மின்மினிப் பூச்சிகள் வலம்வந்து நம் கண்களுக்கு விருந்தளிக்கின்றன அல்லவா?

அந்த கண்கொள்ளாக் காட்சியினை, 'கார்த்திகை விளக்குகள்' கண்சிமிட்டுவதற்கு உவமையாக்குகிறார் ஒரு கவிதையில்-

''கங்குல் இருளிற் கவின்மணிபோல், புன்னகைபோல்
எங்கள் குடிலில் எழிற்கோலந் தீட்டு கின்ற
சின்னஞ் சிறுவிளக்கைச் சித்திரத்தைக் கண்டீரோ?
என்ன வியப்பென்றே என்னெஞ்சம் கூத்தாடும்!''

-வியப்புதான் என்ன வென்கிறீர்களோ, கேளுங்கள்.

கீர்த்தி, இளமை, கிழியாப் பழம்பெருமை,
சீர்த்தியிவை நான்கும் சிறப்புருப் பெற்றதுபோல்,
தென்னையின் பாளை சிதறும் புதுமலர்போல்,
பொன்னை உருக்கும் புதுமைபோல், மற்றும்
அகழ்வாரைத் தாங்கும் அவல நிலத்திற்
புகழ் உருவம் ஒன்று புறப்பட்ட தோற்றம்போல்

இவை மட்டுமா, வியப்புக்குரியவை, மேலும் கூறுகிறார்.

'பொய்யே மலிந்த புலையிடையே நன்னெஞ்சம்
'ஐயோ!' என் றேங்கி அழுதகண் ணீர்த்துளிபோல்
போர்த்திய கார்இருளிற் போட்டதோர் முத்தாகிக்
கார்த்திகைப் பெண்ணேந்தும் கைவிளக்காய் -
மெய்விளக்காய்த்
தென்றலில் ஆடித் திசையில் இசைபரவ
முன்றிலில், மற்றும் முனைமுகட்டில் ஊசலிடும்!''

கவிஞர் கற்பனை இத்துடன் நிற்கவில்லை. மேலும் தொடர்கிறது.

இருண்ட இருட்டில் ஒளிர்ந்தும் மறைந்தும் பறந்து செல்லும் மின்மினி 'சற்றே அமர்ந்து, தனித்திருந்து, தன்னுணர்வு பெற்றே சிறுதீப் பிறக்கப் பறக்குங்காண்!'

முடிவில், 'ஐப்பசித்தூதை அனுப்பிவைத்துக் கார்த்திகையைக் கைப்பிடித்த வானின் ககனத் திருவிளக்கு!' என்கிறார்.

அத்துடன், பூவின் இதழ் ஒன்று பொன்சிறகு பெற்றதுபோல்!' தோன்றி, 'வாழும் இடத்திற்கு வாழ்த்தாகி, வான் விருந்தாய்ச் சூழும்

சுடர்போன்ற தோற்றம்காண்!' மின்மினிகாண்!' எனத் தனக்கேற்பட்ட வியப்பினை முழுமையாகக் கூறி கவிதையை முடிக்கிறார்.

இங்கே - மழையின் சாதனையைக் கூறி, மின்மினி பூச்சிகளின் மெய்ச்சிலிர்ப்பினையும் வியந்துரைத்த நம் கவிஞர், அடுத்து, 'அணுவின் ஆற்றலை' பெருமிதத்துடன் பாடுவதையும் கேளுங்கள்'.

கடந்த காலங்களில், உலகின் அழிவுக்குக் காரணமான 'வெடிகுண்டு' மட்டுமே அணுவின் ஆற்றலாய் விளங்கிவந்தது. இனி வருங்காலத்தில், 'அணுசக்தி' மக்களின் மேம்பாட்டிற்கு மிகுபயன் நல்கும் பேராற்றலாய் விளங்குமென்கிறார் கவிஞர்.

சின்ன அணுவிற்கு இந்தச் செகத்தினை மயக்கிடும் வலிமையுண்டு. அதைச் சீராகப் பயன்படுத்தினால், பாலை நிலத்தையும் பசுமை படர்ந்த சோலைநிலமாக மாற்றிடலாம். பிணியுற்ற மக்கள் புதுவாழ்வு பெறலாம். 'பழமை'யெனும் இருட்டைக் கிழித்து நாம் 'இந்திரர்' ஆகிடலாம். அப்படி நாம் உயரும்போது-

'பாசிபடிந்த பழங்கருக்கல் பேர்ந்துவிழ
ஆசியா, ஐரோப்பா பேதம்அறுந்துவிட
இன்பம், இனிமை, இகமே சுகமென்றும்
துன்பம் ஒழிந்து தொலைந்த யுகமென்றும்
எல்லைப் பிரிவுகளோர் எள்மூக்காய் மாறிவிட
இல்லை பிரிவினைகள் 'யாதுமூர்; யாவருமே
கேளிர்' என மாறக் கீழ்நாடும் மேல்நாடும்
தோளிணைந்து நிற்க...

உலகெங்கும் தொழில் வளம் பெருகும். விஞ்ஞானம் வளர்ந்து புதிய தொழில் நுட்பங்கள் கண்டறியப்பட்டு, கையுழைப்பும், கால் உழைப்பும், காட்டிமை போலுழைத்த மெய்யுழைப்பும் குறைந்து ஆரோக்கியமான புதுவாழ்வு மலரும். மேலும் - கல்வி வளரும். கலைகள் பெருகும். பேதங்கள் வீழ்ந்து போகும். சமத்துவம், சகோதரத்துவம் மேலோங்கும். அதன்வழி, இவ்வுலகு பொதுவுடைமைப் பூங்காவாக மாற்றம் எய்தும். அப்போது-

''ஞாயிற்றின் பேரொளியை நாட்கள் பிறக்கின்ற
வாயிலை நாம்கடந்து வான்கதவந் தான் திறப்போம்!'
முடிவில் ..........
'பூதங்கள் யாவும் புவிப்பொருள் காட்டு கின்ற
நாதங்கள் ஆயின! நாம் மகிழ்ந்தாடுவமே!'

காலத்தின் நெருக்குதல் நேரும் போதெல்லாம் நம்மில் பலருக்கு 'மண்ணின் மைந்தர்' என்ற எண்ணம் எழுவதுண்டு. ஆனால், கவிஞர்கள் எப்போதுமே மண்ணின் மைந்தர்களாகவே வாழ்ந்து வருகின்றனர் என்பது முற்றிலும் உண்மை.

கவிஞர் படைத்த 'நெய்வேலி நாம் பெற்ற பேறு' என்ற கவிதை அதனை மெய்ப்பிப்பதாகக் கூறலாம்.

தென்னார்க்காடு தமிழ்நாட்டின் ஒரு பகுதி.

அங்குள்ள 'நெய்வேலி நிலப்பரப்பில் 'நிலக்கரி' படிமங்கள் புதைந்துள்ளதைக் கண்டறிந்து, சுரங்கம் அமைத்து நிலக்கரியை வெட்டி எடுக்கவும், மின் உற்பத்தி நிலையம் அமைத்து இருண்ட நிலத்தை ஒளி வெள்ளத்தில் மிதக்கச் செய்யவும், ஆன அற்புதமான நிகழ்வுகளை யெல்லாம் நமது அரசாங்கம் நிகழ்த்திக் காட்டியதை வரவேற்று கவிதை படைத்தார் தமிழ்ஒளி.

1960-இல் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கப் பணி தொடங்கப்பட்ட காலகட்டத்தில், இக்கவிதையும் கவிஞர் உள்ளத்தினின்றும் பிறப்பெடுத்து வெளிவந்துள்ளதை இங்கே, கவனத்தில் கொள்ளுவது சிறப்பாகும்.

உயிர்த்துடிப்பு மிக்க உணர்ச்சிக் கவிதையின் ஒரு சில பகுதிகளை மட்டும் உங்கள் முன்வைக்கிறேன்.

''அரிய நிலக்கரியே! ஆசையே! முன்னாட்
பெரிய மரங்கள் பெயர்ந்துவீழ்ந் துட்புதைய
மண்ணுள், அதன்வயிற்றுள் மாயமாய்த் தோன்றியநீ
எண்ணுள், அடங்கா இடங்கொண்டு கண்துயின்று
பன்னாள் உறைந்து படிவங்கள் ஆயினாய்!
முன்னாள் அறிய முதல்தந்தாய் இன்றைக்கே!

*மூங்கிற் பெறுங்காடு முன்னங் குழல்தந்து*
*வீங்கி வளர்ந்து, விழுந்து விறகாகி*
*அழுந்தி அடிமண்ணுள் அங்கே கிடந்து*
*பழுப்பு நிலக்கரியாய்ப் பாய்ந்தெழுந்த விந்தைதனைத்*
*தென்னாடு கண்டு சிலிர்ப்பெய்த ஆம், இன்று*
*பொன்னான நேரம், புதுநாள் பிறந்துளது!*

இந்நன்னாளில், வெட்டியெடுக்கப்படும் நிலக்கரி நம் நாட்டின் பொருள் வளத்தைப் பெருக்கும். அதன் வழி கல்வி, கலை வளரும், இளைய சமுதாயம் ஏற்றம் பெறும்.

ஈன வறுமை இருள் அகலும், எவ்விடத்தும் ஞான ஒளி பரவும். உழைப்பால் நம் நாட்டை உயர்த்தலாம் என்கின்ற நம்பிக்கை எழும்.

இத்தகைய மகத்தான சாதனைகளுக்கு வித்திட்ட 'நெய்வேலி நிலக்கரியை'

*'வாழ்வை உவந்தளிக்கும் வையப் பெருநிதியே!*
*தாழ்வு தொலைக்கும் தனிச்சுடரே வாழிய நீ!*

என மிகுந்த நம்பிக்கையுடன் வாழ்த்துகிறார் கவிஞர்.

தத்துவ நோக்கில் பல அரிய கவிதைகளைப் படைத்தவர் தமிழ்ஒளி.

அந்த வரிசையில் 'பட்டமரம்' பாடல் தனிச்சிறப்புப் பெற்றது.

அதுவன்றி, சமூகத்தில் காணப்படும் பொய்யான போலித்தனங்களை எள்ளி நகையாடும் பாணியில் ஏழு வெண்பாக்களும் கவிதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

அவற்றுள் 'பிறந்த நாள்' பெருமை பேசுவோரை எச்சரிப்பது போன்ற ஒரு கருத்தினைப் பின்வரும் வெண்பா பேசுகிறது:

*''ஏது பிறந்தநாள்? ஏதோ இறந்த நாள்!*
*ஏதேதோ மண்ணில் இருந்தநாள் - ஓதுவீர்!*
*எல்லாம் ஒருநாள்! இதற்கேன் திருநாள்!*
*கல்லாத மூடர்களே!''*




அடுத்தது - வாழும் மனிதர்களை மறந்து செத்தார்க்குத் திருவிழா கொண்டாடுபவர்கள் குறித்து:

''மண்மேல் இருப்பார்க்கு மண்ணிற் குழிபறிப்பீர்!
விண்மேல் இருப்பார்க்கு வேட்டுவைப்பீர் உண்மைதனை
கொன்று புதைத்துக் கொடிகட்டிக் கும்பிடுவீர்!
என்றும் உமக்கே விழா!''

தகுதியற்ற மனிதர்களை உயர்த்திவிடும் தன்மை பற்றி:

''ஊமைதான் பேசுமோ? உடுக்கை அடித்தால்
ஆமை பறக்குமோ ஆகாயம்? - ஆமையா,
தொற்றும் வீணர்களைத் தூக்குகிறீர் பறக்க
உற்றசிற குண்டோ, உரை!

இறுதியில் - நெற்றித்திலகமிட்டும் நேர்மையின்றி வாழ்வார் பற்றி:

''சாமிகாண், எல்லாருஞ் சார்ந்து நடமாடுஞ்
சாமிகாண்!' என்கிறது சாத்திரமே - ஆமிவர்க்கும்
நெஞ்சில் விடமுண்டு! 'நெற்றிவிழி' யென்ற
அஞ்சனமும் உண்டல் லவா?

**குழந்தைப்பாடல்கள்**

தமிழ்ஒளியின் தனிக்கவிதைகளில் தனிச் சிறப்புடன் விளங்குவது குழந்தைப் பாடல்கள்.

புரட்சிகரமான கவிதைகளையும், காவியங்களையும் படைத்த தமிழ் ஒளிக்கு, குழந்தைப் பாடல்கள் படைப்பது எப்படி சாத்தியமாயிற்று என ஐயுறுவோர்க்கு, முதுபெரும் குழந்தை எழுத்தாளர் திரு.'தி.ஜ.ர' அவர்கள் பதில் உரைக்கிறார்:

''கவிதையின் ஆணிவேரே குழந்தை உள்ளந்தான். குழந்தையின் மாசற்ற உள்ளத்திலே பிறக்கும் வியப்பு, ஆர்வம், ஆனந்தம், ஆத்திரம், கற்பனை, பொய் அறியாச் சொல் இவையெல்லாம் இணைந்த திரள்தான் கவிதையின் உயிர்க்கரு. ஒருவகையில், கவிஞர்

ஒரு குழந்தை. அறிவும் அனுபவமும் முதிர்ந்த குழந்தை. கவிஞர் தமிழ்ஒளி இத்தகைய "குழந்தை" - சிறந்த கவிஞர்".

தமிழ்ஒளி குழந்தைகளுக்காக படைத்த எழுபத்திரண்டு பாடல்களை திரட்டி, 'அந்திநிலா பார்க்கவா!' என்ற தலைப்பில் நூலொன்றை வெளியிட்டுள்ளார் சஞ்சீவி. அந்நூலிலுள்ள இரண்டு பாடல்களை மட்டும் உங்கள் முன்வைக்கிறேன்.

சூரியக்கதிர் என்றாலே 'உஷ்ண' உணர்வு நினைவில் எழும். அதன் வெம்மையை மலரின் மென்மையாக குழந்தைகளுக்கு உணர்த்துகிறார் கவிஞர். பாடலைப் படியுங்கள்.

*"பூத்தமலர், புதிய மலர்*
*பொங்கும் சூரியன்!*
*மூத்த கடலில் காலை வந்து*
*முளைத்த சூரியன்!"*

*"விரிந்த மலர், பிரிந்த மலர்*
*வெய்ய சூரியன்!*
*எரிந்த பகலில் உச்சி ஏறி*
*எரித்த சூரியன்!"*

*"சாயமலர் தூயமலர்*
*சாய்ந்த சூரியன்!*
*மாயமாக மேற்கில் சென்று*
*மறைந்த சூரியன்!"*

இங்கே சூரியக்கதிரின் இயல்பான தோற்றம், பூத்த மலராகவும், விரிந்த மலராகவும், சாய மலராகவும் குழந்தைகளின் மனதைத் தொடுவது புதுமையல்லவா? மற்றொரு பாடல், இயற்கை அழகில் குழந்தைகள் மனம் ஒன்றிப்பாடி, ஆடி மகிழத் தூண்டுகிறது. அதையும் படியுங்கள்.

*"ஆற்றில் தண்ணீர் 'சலசல'வென்றே ஓடும் - ஆ, ஆ!*
*அதுதான் நன்றாய் அழகாய் நாளும் பாடும்!*

காற்றும் நன்றாய்க் 'கலகல'வென்றே வீசும் - நம்
காதுகள் மகிழப் பறவைகள் கூடிப் பேசும்!
சேற்றில் மலர்ந்த தாமரை மலரும் ஆடும் - ஆ, ஆ!
தென்னையின் ஓலை மகிழ்ந்து தாளம் போடும்!
ஊற்றும் தண்ணீர் கால்வாய் நிறைந்து செல்லும் -
ஆ, ஆ!
ஓடிடும் போதே ஒவ்வொரு கவிதை சொல்லும்!

நல்ல இயற்கை தன்னையே என்றும் நாடு - ஆ, ஆ!
நண்பர்க ளாவோம் இன்றே நாமதனோடு!
புல்லும் நெல்லும் சொல்லும் கதையைப் போற்று -
ஆ, ஆ!
பூச்செடி வளர நிறையத் தண்ணீர் ஊற்று!
நில்லும் இந்தப் பூந்தோட்டத்தைப் பாரும் - ஆ, ஆ!
நெஞ்சு மணக்கும் மலர்கள் பறித்துத் தாரும்!
அல்லும் பகலும் இயற்கை அன்னை அருளால் -
நாம்
அன்புடன் வாழ்வோம் அழகென்கின்ற
பொருளால்!

இவை மட்டுமன்று, குழந்தைகளின் நன்மனத்தில் பதியவேண்டிய நல்லன்பு, நட்புறவு, நாட்டுப்பற்று, கல்வி ஆர்வம், பொது அறிவு இன்னபிற இனிய செய்திகளையும், குழந்தைகள் குதூகலமாகப் பாடி மகிழும் வண்ணம் அற்புதமான சந்தங்களில் பாடல்களை அமைத்துள்ளார் தமிழ்ஒளி.

# 3

# காவியங்கள்

### 1. கவிஞனின் காதல்

புரட்சிக்கவிஞர் பாரதிதாசனாரின் 'பாண்டியன் பரிசு' காவியத்தை நகல் எடுக்கும் பேறுபெற்றவர் தமிழ்ஒளி. அப்போது மனதில் பதிவான எண்ணங்களே 'கவிஞனின் காதல்' எழுதக் காரணமாயிற்று. இங்கே, கதைக்களம் 'பாண்டியன் பரிசை' நினைவூட்டுவதும் உண்மையே! அதனால், கவிஞர் கூறும் கருத்துக்களை மட்டும் முன்னெடுத்துப் பேசுவோம்.

கதையில் காதலர்கள் பிரிக்கப்படுகின்றனர். அதனை-

'ஓடுகின்ற வெள்ளத்தை மறித்தாற் போலும்
உயர்ந்துவளர் மரநுனியைத் தறித்தாற் போலும்
பாடுகின்ற தமிழ்ப்பாட்டைத் தடுத்தாற் போலும்
பழந்தமிழைச் சிலரிடையே அடைத்தாற் போலும்
கூடுகின்ற காதலரைப் பழக்கமென்னும்
கொடுவாளால் மன்னர்குலம் வெட்டிப் போட
நாடுகின்ற தீமையினை நல்லதென்று
நச்சுப்பல் கொண்டோர்கள் சொல்லி விட்டார்!

நாடு கடத்தப்பட்ட கதைத்தலைவன் அழகன், தஞ்சம் புகுந்த நாட்டில் ஏழையர்க்கு கல்வி புகட்டுகிறான்.

'சாறற்ற வாழ்வுக்காய் உழைத்து ழைத்துச்
சாண்வயிறு வளர்ப்பதற்கே நாளெல் லாமும்
ஊரடைந்து கல்வியினைக் காணா ராகி
உளுத்துவிட்ட முதியோர்க்கும் இளையோ ருக்கும்

சோறற்ற ஏழைகட்கும் படிப்புச் சொல்லித்
தருகின்ற தொண்டையவர் மேற்கொண்டார்கள்!

இன்று பேசப்படும் முதியோர் கல்வி, பாலர்களுக்குப் பகல் உணவுடன் கூடிய கல்வித் திட்டம் குறித்து நம் கவிஞர் (1944) முன்னரே எடுத்துரைத்தவர் என்பதும் அறியத்தக்கதே.

**2. நிலைபெற்ற சிலை**

மருதவாணன் உயர்சாதி இளைஞன். அவன் காதலி வஞ்சி சேரிப்பெண். சாதிச் செருக்கும், பணத்திமிரும் சேர்ந்து அவர்களைப் பிரிக்கிறது. வாழ்வில் இணைய முடியாதவர்கள் சாவில் சங்கமிக்கின்றனர். உயிரோட்டம் மிக்க இந்தக் கதையில் கவிதை உயிர்த்துடிப்புடன் வெளிப்பட்டுள்ளது. எத்தனை முறை படித்தாலும் அலுப்புத் தோன்றாது. இயற்கை வனப்பும் உவமைச் சிறப்பும் காவியம் முழுவதும் ஒளிர்கின்றன. கருத்துக்கள் சிலவற்றை மட்டும் முன்வைக்கிறேன்:

'பொன்முடிப்பின் முன்மனிதன் பொட்டுப் பூச்சி
போக்கிடவே வேண்டும்இந் நிலைமை தன்னை;
பொன்முடிகொள் மன்னரையும் வீழ்த்தி, நல்ல
புரட்சியினை உண்டாக்கும் எழுதுகோலின்
மென்முடியின் அணைப்பாலே எழுப்பும் 'தாட்கள்'
மிக விரைவில் நான் எழுப்ப உதவ வேண்டும்!'

ஏழை மக்கள் ஏற்றம்பெற புரட்சிசெய்ய வேண்டும். அவர்களை அணிதிரட்ட 'ஏடு' தொடங்கவேண்டுமென்பதையே 'தாட்கள்' எனக் குறிப்பிடுகிறார் கவிஞர். மக்களிடம் காணப்படும் பேதங்களை வீழ்த்த உறுதி பூணுமாறு அறைகூவல் விடுக்கிறார்:

'ஓரினத்து மக்களுளே பிரிவும், சாதி
உண்டாக்கித் திண்டாடும் நிலையும், மக்கள்
பேரியலை மறந்துபொருள்ஏற்றத் தாழ்வால்
பெருங்கேடு விளைப்பதுவும், விதியைக் கூறிப்

பாரியலில் செந்தமிழர் ஏற்றங் கொள்ளும்
பாதையினை அடைப்பதுவும் யாவும் இங்கே
ஓர் நொடியில் விழச்செய்வோம்! தொண்டொன் றேநம்
உயிர்என்போம்! எடுத்தடிமுன் வைப்போம் - இன்றே!

இயற்கை எழிலைச் சித்தரிக்கும் ஒரு பாடல்:

''தேங்காயின் மேற்றோலை உரித்து வெண்மை
தெரியஉடைத் தாற்போலே இருள் சரிந்தே
ஓங்குகதிர் ஒளிபாய தெளியும் ஞாலம்!
ஒளிர்பொன்னின் குன்றமென விண்ணி லெங்கும்
வீங்குமுகில் விளங்கும்வான் தங்கக் கோட்டை!
மேற்றிசையில் பலவண்ணச் சித்திரங்கள்!
தீங்குரலில் புள்பாடும்! கடல்மு ழக்கும்!
சிற்றொலியும் பேரொலியும் கைக லக்கும்!''

ஓங்கு கதிர் உதயத்தை உரிக்கப்பட்ட தேங்காயின் உள் ஒளிரும் வெண்மைக்கு ஒப்பிட்டது புதிய உவமை யல்லவா?

### 3. வீராயி

வெள்ளையர் ஆட்சிக் காலத்தில், ஆப்பிரிக்க நாட்டின் ரப்பர் காடுகளிலும், தேயிலைத் தோட்டங்களிலும், இந்திய அடிமைகள் கொடுமைகளுக்குள்ளானது வரலாற்று உண்மை.

'கரும்புத் தோட்டத்திலே' என்ற கவிதையில் பாரதியும் கண்ணீர் வடித்திருக்கிறார்.

'தமிழ்ஒளி' தாமறிந்த ஒரு நிகழ்ச்சியை மையமாக வைத்து 'வீராயி' காவியம் படைத்துள்ளார்.

கதை: பெருமழை பெய்து திரண்ட பெருவெள்ளத்தில், மருதூர் சேரி அழிந்து போகிறது. வைக்கோல் போர் மீது அமர்ந்து தப்பிய இருவர் புதுப்பட்டி கிராம மக்களால் மீட்கப்படுகின்றனர்.

கூட்டத்தில் இருந்த சிறுவன் வீரண்ணன், மீட்கப்பட்ட இருவரும் தங்கள் உறவினர்கள் என்று கூறவும், 'இவர்கள் பறையர்கள்' என

அறிந்த ஊரார் ஒதுங்கிச் செல்லவும், வீரண்ணன் ஓடிச்சென்று தன் தந்தையிடம் சேதிசொல்லி சேரி மக்களை அழைத்து வருகிறான்.

மீட்கப்பட்ட இருவரில் கிழவர் வேடப்பர் இறந்து போகிறார். சிறுமி வீராயியை, வீரண்ணனின் தந்தை தன் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறார்.

வீராயியும் வீரண்ணனும், சகோதர பாசத்துடன் வளர்ந்து பெரியவர் களாகிறார்கள். இருவருமே ஜமீன்தாரின் பண்ணையில் தினக்கூலிக்கு வேலை செய்கிறார்கள்.

பருவச்செழிப்புடன் விளங்கும் வீராயி மீது ஜமீன்தாரன் குறிவைக்கிறான்.

ஒரு மாலைப்பொழுதில் கூலிபெறச் சென்ற வீராயியை வளைத்து தன் வீட்டிற்குள் அடைக்கிறான்.

நேரம் கடந்த பின்னும் வீடு திரும்பாத தன் தங்கையைத் தேடி ஜமீன்தாரன் வீடு நோக்கிச் செல்லுகிறான் வீரண்ணன்.

அங்கே, 'அலறல்' சத்தம் கேட்டு, தன் தங்கைக்கு ஆபத்து நேர்ந்துள்ளதாகக் கருதி, வீட்டுக் கதவினைத் தன் கோடாரியால் பிளக்கிறான். அவனை எதிர்த்த ஜமீன்தாரனைக் கோடாரியால் வெட்டிக் கொன்றுவிடுகிறான். சட்டம் அவனுக்குத் தூக்குத்தண்டனை விதிக்கிறது. வீராயியும், மாரிக்கிழவரும் அனாதைகளாகின்றனர்.

ஒரு கங்காணி மூலம் இருவரும் ஆப்பிரிக்க நாட்டிற்கு அடிமைகளாகக் கப்பலில் சென்றனர். அங்கே கடுமையாக உழைத்தும் போதிய உணவின்றி நோயுற்று மாரிக்கிழவர் மடியவும், வீராயி வாழ மனமின்றி தன்னை மாய்த்துக் கொள்ள முடிவு செய்கிறாள். தக்க சமயத்தில் அங்கு வந்த ஆனந்தன் அவளைக் காப்பாற்றி வாழ் வளிப்பதாக உறுதிமொழிகிறான்.

பின்னர், இருவரும் தாய்நாடு திரும்புகின்றனர். ஆனந்தனுடன் வந்த வீராயி பறைச்சி எனத் தெரிந்ததும் அவனுடைய தந்தை அவர்களை வெளியேற்றுகிறார்.

'ஆனந்தன் - வீராயி' புரட்சித் திருமணம் சேரியில் நடக்கும் என அறிவிக்கப்படுகிறது. ஆனந்தனின் தந்தை ஊர் மக்களை அழைத்துச் சென்று, திருமணம் நடக்கவிருந்த வீட்டிற்கே தீ வைத்து விடுகிறார்.

காதலர்கள் தீயில் கருகி மடிகின்றனர்.

'நிலைபெற்ற சிலை'யில் காதலர்களைக் கொன்றுவிட்ட சாதிவெறி, 'வீராயி' காவியத்திலும் தலைவிரித்தாடுகிறது கதைக் களம்

மட்டுமின்றி கருத்து வீச்சிலும் புரட்சிக் காப்பியமாக அமைந்த நூல் வீராயி.

பாக்கள் ஒவ்வொன்றும் கம்பியில் பாய்ந்து செல்லும் மின்சாரம் போன்று படிப்போரை ஈர்க்கின்றன.

இயற்கை வருணனையும் உவமை அழகும் 'பா' நயத்துடன் ஒன்றி ஒளிர்கின்றன.

கதையின் திருப்பமாக அமைந்த நீதிமன்றக் காட்சியில் நிகழும் உரையாடலைக் காண்போம்:

*''ஜமீன்தாரை நீ கொலை செய்தாயா?''*
*''ஆமாம்; உண்மை!*
*அஃதவன் பிழையே!''*

*''நீதிமன்றமும் நியாயங் காக்கும்*
*கோட்டமும் இருக்கக் கொலைசெய் வதுவோ?*
*உயிரை மீண்டும் உடலில் சேர்ப்பையோ?''*

*''கற்பழிந்தபின் நீங்கள் காட்டிடும்*
*நீதி மன்றமும், நியமஞ் செய்திடும்*
*கோட்டமும் மீண்டும் கொடுக்குமோ கற்பை?''*

'ஏட்டில் இல்லாத சிக்கல்... தமிழர் நாட்டில் நங்கையர் கற்பே நல்லுயிர்! மானம் அதுவே! வாழ்வும் அதுவே!''

'வானம் பொழியும் மழையும் அதனால், வருவதென்பதே பெரியோர் எண்ணம்.''

கதை முடிவில்...

*ஆனந்தன், வீராயி, வீரண்ணன், மாரி*
*அருங்காதல் கற்பினிலே அன்பினிலே இங்கு*
*மானமுடன் வாழ்ந்தார்கள்! தமிழ்நாடே நீதான்*
*மனம்பொறுக்க மாட்டாமல் அவர்உயிரைக் கொன்றாய்!*

*வானத்து விண்மீனை இருள்அழித்தல் இல்லை!*
*மாக்கொடுமைத் தமிழ்ப்பண்பு தனையழித்த*
*லுண்டோ?*
*ஈனசெயல் அழியுங்காண்; அவரழிய மாட்டார்!*
*என்றைக்கும் இங்கவர்கள் நாமமது வாழும்!*

**4. மேதின ரோஜா**

சேரி வாழ் மக்களை செங்கொடி நிழலில் அணிதிரட்ட வேண்டு மென்கிற நோக்குடன் எழுந்த காவியப் படைப்பே 'மேதின ரோஜா'

கதைத்தலைவன் கண்ணன், சேரி மக்களுடன் நட்பு பாராட்டி சீர்திருத்தப் பணிகளைச் செய்து வருகிறான்.

அவனுடைய உறவுப் பெண் ராதையிடம் மாறா அன்பு கொண்டிருந்தான். இருவருக்கும் திருமணம் நடக்கிறது.

நிகழ்ச்சியின் போது சுக்கிரன் சேரி தீப்பற்றி எரிவதாகத் தகவல் எட்டுகிறது.

ராதையின் கழுத்தில் மங்கலநாண் பூட்டுவதையும் மறந்து மணமேடை யினின்றும் எழுந்து சேரியை நோக்கி விரைகிறான். எரிந்து கொண்டிருந்த தீயை அணைத்துவிட்டு மக்களுக்கு ஆறுதல் கூறுகிறான் கண்ணன்.

இங்கே - முகூர்த்த நாழிகை முடிந்து போனதால் திருமணம் தடைபட்டுப் போகிறது.

ராதையின் தந்தை சினம் கொள்ளுகிறார். ராதை துயரத்தில் ஆழ்ந்து நோய்க்கு ஆளாகி பின்னர் மடிகிறாள்.

தமிழ்ஒளி கண்ணனுக்குக் கடிதம் எழுதுகிறார். அவன் சென்னை வருகிறான். ஊர் திரும்புகையில், தன் அன்புக்குரிய ராதையின் நினைவாக ரோஜாச் செடி ஒன்றை வாங்கி தமிழ்ஒளிக்கு அன்பளிப்பாக வழங்கிச் செல்கிறான்.

கண்ணன் தொண்டு பணியை சேரியில் தொடர்கிறான். விவசாயக் கூலித் தொழிலாளர் நலன்காக்க சங்கம் நிறுவி, அவர்களைச் செங்கொடி நிழலில் அணிதிரட்டி கோரிக்கைகளை முன்வைக்கிறான்.

ராதையின் தந்தை ஊர்மக்களை ஒன்றுகூட்டி, 'கண்ணன், நமக்கு எதிராக சேரிமக்களை ஏவி விடுகிறான். அவனை ஒழிக்க வேண்டுமென சூளுரைக்கிறார்.

திட்டமிட்டபடி நிலவுடைமையாளர்கள் திரண்டு சென்று சேரிக்குத் தீ மூட்டுகின்றனர். அதேசமயம், காவல் துறைக்கும் தகவல் அனுப்புகின்றனர்.

கண்ணன், தீயை அணைப்பதில் தீவிரமாக ஈடுபட்டிருந்த போது, காவலர்கள் வருகிறார்கள். அவர்களிடம், 'கண்ணனைச் சுட்டிக்காட்டி, இவன்தான் தீ மூட்டியவன்' எனப் பொய்யுரைக்கின்றனர்.

காவலர்கள் கண்ணனைத் தாக்குகின்றனர். அவன் எதிர்க்கிறான். காவலர்கள் துப்பாக்கிச்சூடு நடத்தி அவன் உயிரைப் பறிக்கின்றனர்.

மறுநாள் பத்திரிகைச் செய்தியில்-

''சேரியை எரித்த கண்ணன் காவலர்களையும் எதிர்த்தான். காவலர்கள் நடத்திய துப்பாக்கிச்சூட்டில் கண்ணன் மடிந்தான்.''

இதனைக் கண்ணுற்ற தமிழ்ஒளி கதறி அழுகிறார். சேரிமக்களுக்குத் தொண்டு செய்த கண்ணனா சேரியை அழித்தான்? இது எத்துணை கொடூரமான பொய். ராதையின் தந்தையால் விளைந்த கொடுமை இது' எனக் குமுறுகிறார்.

அன்று மேதினம், ராதையின் நினைவாக கண்ணன் கொடுத்த ரோஜாச் செடியில், ஒரு ரோஜா மலர் பூத்துச் சிரிக்கிறது. அதனை 'மேதின ரோஜா!'' எனப் பெருமை பாராட்டி ஆறுதல் அடைகிறார் கவிஞர்.

நூலில் இயன்றுள்ள கவிதைகளில் சில:

''செக்கர் என ஒளி சிந்திச் சிரித்தது!
தியாகக் கனல்எனப் பூத்து மிளிர்ந்தது,
சொக்கும் அழகொடு சோகம் கலந்திடத்
தொட்டியில் ரோஜா நறுமலர் பூத்தது!
அக்கணம் காற்றில் மிதந்த நறுமணம்
அன்பை உணர்ச்சியைத் தியாகச் சரிதையைத்
திக்கில் இரைக்கவும் சிந்தை கரைந்தது
சிந்தனை மேதினம் வந்ததென் றார்த்தது!

இது தொடக்கச் செய்யுள். முடிவில்-

''பொய்யால் உலகப் புரட்சிநின் றிடுமோ?
கையின் குடையால் கதிர்மறைந் திடுமோ?
வெள்ளியைக் காரிருள் வீழ்த்துதல் உண்டோ?
எள்ளி நகைக்கும் இராக்கதர் மடிவர்!

கண்ணன் உயிரைக் கவர்ந்திடு மூடர்
மண்ணொடு மண்ணாய் மடிவது திண்ணம்!
மக்களின் கையால் மறைவது திண்ணம்!''

கண்ணா உனக்குக் கவிமலர் சூட்ட
மண்ணக மெங்கும் மலர்மணம் வீச
மேதினம் இன்று விரைந்தது பாராய்!
மேதின ரோஜா மலர்ந்தது பாராய்!

### 5. விதியோ? வீணையோ?

புகழ்பெற்ற 'சிலப்பதிகாரக் காவியத்தில் வரும் 'வேனிற்காதை' நிகழ்வுகளே, 'விதியோ வீணையோ?' இசை நாடகத்திற்கும் அடித்தளமாயமைந்துள்ளது.

கவிஞர் தமக்கு நேர்ந்த காதல் தோல்வியை, காவியமாக்க விரும்பி, மாதவியை பாடுபொருளாக ஏற்றார் போலும்!

நிகழ்வின் முடிவுகள் எவ்வாறாயினும், தமிழ் மொழியில் ஓர் புதுமையான இசை நாடகம் தோன்றியது நாமடைந்த நற்பேறே.

இசை நாடக மரபிற்கேற்ப, காட்சிகள் தோறும் ஆசிரியர் அவைமுன் தோன்றி கூறும் முகத்தான் 'உரைப்பாட்டு மடையும்' கருத்தினைத் தொகுத்துரைக்கும் பாணியில் 'உரைபெறு கட்டுரை'யும் இடம்பெற்றுள்ளன. இவையன்றி பிற பாக்கள் அனைத்தும் புத்தம்புதிய சந்தப்பாக்களே.

சான்றாக தொடக்கச் செய்யுளைக் காண்போம்.

''காவிரி மங்கை நடந்து கடற்கரை
கண்டு குளிக்கு மிடம்!
பூவிரி தாழைக ளென்றவள் ஆடை
களைந்து புனைந்த இடம்,

நீவு நெடுந்திரை யோடு கடல்விளை
யாடிய நெய்தல் இடம்!
யாவும் விதிக்கிரை யாகுமெனக் கடல்
ஆடிய கானல் இடம்!

கோவலனைப் பிரிந்து வருந்தும் மாதவியின் நிலையை எடுத்துரைக்கும் பாடல்:

'யாழ் உருக்கொண்டு கிடந்திட்ட ஊழினால்
அதுதரும் போதை யென்னும்
ஏழ்இசைக்கனல் மூட்டிய வெம்மையால்
இணைந்து வாழ்கின்ற ஆண், பெண்
வாழ்வினால் வந்த வலுவற்ற தன்மையால்
வளர்கின்ற ஐயங்களால்
தாழிருங் கூந்தல் தையலாள் மாதவி
தனித்துளம் உருகு கின்றாள்.''

மேலும்,

கோபம் அணைந்த குளிர்நிலவு சென்றொளியும்
தீபம் அணைந்த திரியதுபோல் - பாவம்
இரவு துரத்துமிவள் எங்கொளிவள்? வையம்
அரவு துரத்தும் அரன்!

நூல்முடிவில், மாதவி வீணையை உடைத்து மன அமைதி காணுகிறாள்

**6. கண்ணப்பன் கிளிகள்**

கவிஞர், 'மாதவி காவியத்தை' எழுதிவந்தபோது, 'புலவர் காதை'யில் இடம்பெற்ற ஒரு சம்பவம்: கூனி கை மாலை பெற்ற கோவலன்,மாதவியின் இல்லம் நோக்கி பேராவலுடன் விரைகிறான். அவனை வழிமறித்த இரண்டு புலவர்கள் நீதியைப் போதிக்கின்றனர்.

அவர்களுக்கு மறுமொழியாக கோவலன் கூறிய இரண்டு வெண்பாக்களில் ஒன்று:

''குற்றம் குணமிரண்டும் கூட்டிற் கிளிகளென்று
சுற்றம் படநின்ற தொல்லுலகில் - பெற்றம்
பெரிதுண்டு மன்னிக்கும் பேர்க்கென் றறிந்தால்
அரிதுண்டோ ஆற்றும் அறம்?''

கவிஞர் தமது சொந்த வாழ்க்கையில் நேர்ந்த காதல் தோல்வியை நினைவுகூர்ந்தார். தனக்கு எதிராக இயங்கிய 'சக்தி'யை 'கண்ணப்பன்' எனப் பெயர் சூட்டினார். அவனால் கூட்டில் அடைக்கப்பட்ட கூண்டுக் கிளிகளாகத் 'தங்களை' உருவகப்படுத்திக் கொண்டு நேர்ந்துவிட்ட துயர அனுபவங்களை 'கண்ணீர்க் கவிதைகளாகக் கொட்டினார். அதுவே, 'கண்ணப்பன் கிளிகள்' உருவகக் காப்பியமாக வடிவம் பெற்றது.

அற்புதமான 'கண்ணிகள்' தேனாறாகப் பெருக்கெடுத்துப் பாய்கிறது. படிக்க எடுத்தால் முடிக்காமல் வைக்கத் தோன்றாது.

முதலில் கதையைக் கூறுகிறேன் கேளுங்கள். காதல் கிளிகள் இரண்டினை ஒரே கூட்டில் அடைத்து வளர்க்கிறான் கண்ணப்பன்.

ஆண்கிளியிடத்து அவன் அன்பு பாராட்டுவதைப் பொறாமல் பெண்கிளி, அவனைக் கொத்திவிடுகிறது. சினமுற்ற கண்ணப்பன் கிளிகளைப் பிரித்து தனித்தனிக் கூண்டுகளில் அடைக்கிறான்.

பிரிவுத் துயரத்தில் ஆழ்ந்த ஆண்கிளி இறந்துவிடுகிறது. அதனை புதரில் எறிகிறான் கண்ணப்பன்.

பின்னர், பெண்கிளியும், பாலும் பழமும் உண்ணாமல் துன்பத்தில், தோய்ந்து கிடப்பதைக் கண்டு அதனை விடுதலை செய்கிறான்.

பெண்கிளி, புதரிற்கிடந்த ஆண்கிளியைப் பார்த்துப் புலம்புகிறது. பிறகு, ஐயம் கொண்டு வான்பிறையாய்த் தெரிவதுதான் ஆண்கிளியாக இருக்கலாமோ என எண்ணி மேலே பறந்து செல்கிறது.

வெகுதூரம் சென்றும் பிறையை அடைய முடியாமல் ஆவி சோர்ந்து கீழே விழுகிறது. அது விழுந்த இடம் ஆண்கிளி இருந்த அதே புதர் இடம்தான்.

மறுநாள் இரு கிளிகளையும் ஒரு சேரக் கண்ட கண்ணப்பன் மனம் மிக வருந்தி அவற்றை அடக்கம் செய்கிறான். கதை முடிகிறது.

கவிதைகளில் சில:

பிரிக்கப்பட்ட நிலையில் ஆண்கிளி கூறுவது:

''பால்எனக் கெதற்குக் கண்ணப்பா - பெண்
பாலெங்கே சொல்லுநீ கண்ணப்பா?''

பெண்கிளியின் நிலையிது:

''கடலும் உறங்கவில்லை - அலை
காற்றும் உறங்க வில்லை!
படரும் இருளிடையே - கிளிப்
பாவை உறங்கவில்லை!

ஆண்கிளி இறந்தது கண்ட கண்ணப்பன்:

''கொடுப்பதற்குக் கையற்றோன்
பிறர்பொருளைக் கூட்டி
எடுப்பதற்குக் கையுற்றேன்
எனில் உலகம் என்னாம்?
படைப்பதற்குத் திறனற்றேன்
பறவை உன் உயிரைப்
பறிப்ப தற்குப் பலசெய்தேன்
பழிப்ப தற்கும் ஆளானேன்!''

பெண்கிளி கூறுவது:

''கலிமனிதன் இவன்ஒருவன்
கலைப்பண்பும் அறியாதான்
பலிமனிதன் கண்ணப்பன்
பறவை உளம் அறியாதான்''

''பிறர் இறந்தால் எமக்கென்ன
பெயர் எடுப்போம்'' என்றெண்ணும்

*நரர் உலகப் போக்குக்கு*
*நாயகன் நீ கண்ணப்பா!''*

*மனிதன் இழைத்த துயர்*
*மரணத்திற் போய் முடியப்*
*புனிதர் மறைவுக்குப்*
*பொங்காதோ என்நெஞ்சம்?''*

கல்மனதையும் கறையச் செய்யும் கவிதைக் கண்ணிகள் நிறைந்த அற்புதமான உருவகக் காப்பியம் 'கண்ணப்பன் கிளிகள்'

**7. புத்தர் பிறந்தார்**

கவுதம புத்தர் வரலாற்றினை, 'போதிமாதவன்' என்ற தலைப்பில் திரு.ப.இராமசாமி அவர்கள் ஒரு நூல் வெளியிட்டிருந்தார்.

அந்நூலில் அடங்கிய விவரங்களின் அடிப்படையில் 'புத்தர் காவியம்' படைக்க முன்வந்தார் கவிஞர்.

அன்பும் அறமும் அவனியில் செழிக்க அருந்தொண்டு புரிந்த புத்தபகவரின் சரிதம் ஓர் புனித வரலாறு அல்லவா? இதனைக் காவியமாக்கும் பணியும் கடினமானதே. தெளிந்த ஞானமும், ஆழ்ந்த மனக்கனிவும், அமைதிச் சூழலும் இன்றியமை யாததாயிற்று.

ஒரு தவயோகியின் நிலையிலிருந்து படைப்புப் பணியினை மேற்கொண்டார் கவிஞர்.

புத்தர்பிறந்த புண்ணிய பூமியை நினைந்து போற்றி, உரோகிணி ஆற்றின் பெருமையையும், கபிலை நகரின் சிறப்பினையும் எடுத்துரைத்ததும்;

மாமன்னர் சுத்தோதனர் கீர்த்தியும், பட்டத்தரசியாம் அன்னை மாயாதேவியின் மாண்பினையும் புகழ்ந்து பாடினார். அதனை அடுத்து, மகப்பேறு வேண்டி அன்னை மாயாதேவி நோன்பு நோற்றலும், அவள் வயிற்றில் புத்த ஞாயிறு பொலிவுறும் செய்திகேட்டு மன்னர் மகிழ்ந்து மாயாதேவியின் நலம் பாராட்டுதலும்;

பின்னர் உலும்பினி வனத்தில், அன்னை கருவுயிர்த்து மகப்பேறு எய்தலும்; அவர்களை வனத்தினின்றும் மாநகருக்கு அழைத்துச் சென்று விழா எடுத்தலும் ஆன நிகழ்வுகளை அழகிய சந்தங்களில் அற்புதமாகப் பாடினார் கவிஞர்.

அடுத்து, விழாவிற்கு வருகைபுரிந்த 'அசிதமுனிவரும்', ஆரூடக்காரர்களும் பிறந்த குழந்தை, 'அரசாள மாட்டான், அரசர்கள் போற்றும் துறவியாவான்' என உறுதிபட மொழிந்ததும்;

அதுகேட்ட அன்னை மாயாதேவி நினைவிழந்ததும்;

மயங்கிய நிலையில், மைந்தனை எண்ணி எண்ணி அன்னை புலம்பிய புலம்பலும்,

கவிதை வரிகளில் பதிவாகி, காவியப் பணியைத் தொடராமல் தடுத்துவிட்டது.

முற்றுப்பெறாத இக்காவியத்தைப் படித்த மூதறிஞர் முனைவர் மு.வரதராசனார் அவர்கள்,

''புத்தர் பிறந்தார்!' என்ற அருமையான காவியம் முடிக்கப்படாமலே குறையாக நின்றுவிட்டது, தமிழிலக்கியத்தின் குறையாகவே ஆகிவிட்டது' எனக் கூறியுள்ளதும் படைப்பின் சிறப்புக்குச் சான்றாகக் கொள்ளலாம்.

இனி, கவிதைச் சிறப்பினைக் காண்போம்.

கபிலை நகரின் சிறப்பினைக் கூறுகிறார் கேளுங்கள்:

''சந்தனந் தேக்கு மரங்கள்
வந்தனஞ் செய்து வளர்ந்து
சாக்கியர் புகழெனநின் றாடுமே - ஆடுந்
தாளத்தை கற்கும்பறவை பாடுமே!
ஆறுகள் பெருக வயற்
கூறுகள் பெருகி மணி
ஆக்கிய விளைவுமலை போலுமே - மயில்
அகவி வயல்களிடை ஆலுமே!

உரோகிணி ஆற்றின் வனப்பு...

காட்டிடை ஒருமகள்
மீட்டிய யாழ்போற்
'கலகல' என் றோடும் - உரோகிணி
காற்றொடு பண்பாடும்!

மலைகளின் மறைபொருள்
அலைகளிற் கொஞ்சிட
'மடமட' என் றோடும் - நெறி
'நடநட' என் றோடும்!

அன்னை மாயாதேவி, உலும்பினிவனத்தில் இளைப்பாறுகிறார். அப்போது...

'கிள்ளைதனை நிகர்மகளிர்
கேண்மை சொல்லக்
கிளர் மரங்கள் மலர் வீசக்
''கீர்த்தி ஓங்கும்

பிள்ளைதனை நீ மாயை
பெறுக!'' என்றே
பேரோசை எழுந்ததவ்
வனத்தி னுள்ளே!

அப்போது, மாயைதன் மலரடியை வணங்கினாற்போல் மரக்கிளைகள் தாழ்வுற்று நின்றன. தாயானாள் அக்கிளையில் ஒன்றைப் பற்றித் தராதலத்தின் பற்றறுக்குந் தருணம்பார்த்தாள். அக்கணத்தில்...

தாயுடலுள் வீற்றிருந்த
சேயும் ஆங்கே,
தன்னொளியை வீசஇது
தருணம் என்றே.

நோயுடலின் விலாப்புறத்தை
நோக்கலானார்!
நொடியிலவர் ஒளிஎங்கும்
நுழைந்த தம்மா!

சற்றேனுந் துயரின்றி
விலாப் புறத்தால்
சங்கம்போல், சிங்கம்போல்,
தருமம் போலே,

பற்றேதும் இன்றிஒரு
பாலன் தோன்றப்
''பார்இவனே புத்தன்'' எனப்
பாடும்காடு!

பெற்ற குழந்தையைச் சீராட்டி வளர்க்க எண்ணிய மாயாதேவி, அவன் துறவியாவான் எனச் சோதிடர்கள் சொல்லக் கேட்டு மனக் கலக்கமடைந்து மூர்ச்சையுற்றாள். செயலிழந்தாள், பேசலுற்றாள்...

மனங்குழம்பி மாயையவள் மைந்தனோடு
மலர்போலும் வாய்திறந்து பேசலுற்றாள்!
சினந்தளர்ந்து பற்றற்று ஞானங் காத்துச்
செயற்கரிய செயல் எண்ணும் செல்வன் ஆங்கே,
வனந்துய்க்கும் கனவில் ஓர் மலரைப் போலும்
வற்றாத நதியில் ஓர் அலையைப் போலும்
இனம்தெரியா இசைபிலிற்றும் யாழைப் போலும்
இடர் இன்றிப் புன்னகைகொண் டிருந்தான் மன்னோ!

**8. கோசலக் குமரி**

பேராசிரியர் ராகுல் சாங்கிருத்தியாயன் அவர்கள் படைத்த 'வால்காவிலிருந்து கங்கை வரை' நூலில் இடம்பெற்றுள்ள கதை 'பிரபா'.

வரலாறு தழுவிய கற்பனைக் கதையாம் அதனை, சில மாறுதல்களுக்கு உட்படுத்தி, 'கோசலக் குமரி' என்ற தலைப்பில் குறுங்காப்பியமாகப் படைத்துள்ளார் கவிஞர்.

கதை நிகழுமிடம் 'சரயூ' நதி பாயும் 'சாகேத நகரம்'. கதையுடைத் தலைவன் புகழ்பெற்ற வடமொழிப்புலவன் அசுவகோஷ்.

அவனை, கிரேக்க மங்கை ஊர்வசி காதலிக்கிறாள். அவர்களிருவரும், நகரில் நடைபெறும் நீச்சல் போட்டியில் பங்குகொண்டு வெற்றிபெற்று பரிசுபெறுகின்றனர். நெருங்கிய நட்பால் உணர்வு மேலோங்கி வளர்கின்றது.

வேதியர் குலத்தைச் சார்ந்த அசுவகோஷ் கிரேக்கப் பெண்ணை நேசிப்பதை 'பேர்வழி' பார்ப்பான்' என்பார் விரும்பவில்லை.

இதனை அசுவகோஷின் அன்னை 'சுவர்ணாட்சி' என்னும் பொற்கண்ணியும் தடுக்கிறாள். அசுவகோஷ், வேதியர்களின் நேர்மையற்ற செயல்களை எடுத்துரைத்து வேதியர் குலத்துப் பெண்ணை மணக்க விருப்பமில்லையென்கிறான்.

சாகேத நகரில் தலைவிரித்தாடிய சாதிவெறியைத் தணிக்க ஆங்காங்கே புத்த சங்கங்கள் தோன்றலாயின. அவற்றின் தலைவராம் தர்மசேனரைச் சந்தித்து அறிவுரை பெறுகிறான் அசுவகோஷ்.

'பேர்வழி' பார்ப்பான் என்பார்க்கு இதுவும் பிடிக்கவில்லை.

அவர், ஊர்வசியை அணுகி, அசுவகோஷ் ஆற்றல்மிக்க கவிஞன். உன்னிடம் கொண்ட காதலால் கவிதை படைப்பதைத் தவிர்த்து, பித்துப் பிடித்தவனாக அலைகிறான். அவன் காதலை நீ மறுத்தால், கவிதைப் படைப்பில் அவனது கவனம் திரும்பும். அதன்வழி, இலக்கியத்திற்குத் தொண்டு செய்த பெருமை உன்னை வந்தடையும்' என்று இறைஞ்சுகிறார்.

அவளும், 'காதல் பெரிதல்ல, கவிதை பெரிது' என அசுவகோஷுக்கு அறிவுரை கூறுகிறாள்.

அடுத்த நாள், சரயூ நதிக் கரையில் அவளுடைய உயிரற்ற உடல் ஒதுங்குகிறது. அதுகண்டு பேர்வழிப் பார்ப்பான் உள்ளம் பூரிக்கிறார். அசுவகோஷ் அழுதுபுலம்புகிறான். ஆறுதல் பெற புத்த சங்கத்தைச் சரண் அடைகிறான்.

இனி, காவிய அழகைக் காண்போம்.

சரயூ நதியின் எழிலை தமிழ் இலக்கியத்தில் கம்பருக்குப் பிறகு தமிழ்ஒளி ப்ாடியுள்ளது ஒரு சிறப்பு அம்சம்.

பாடலைப் படியுங்கள்...

''மண்ணில் விழுந்து கிடந்தபட் டாடைபோல்
மாண்பு பெறும் சரயூ

விண்ணில் விழுந்து, கிடந்தவில் என்றிட
விந்தை தரும் சரயூ
பண்ணில் விழுந்து, பரவிய பாடலாய்ப்
பாய்ந்து செலும் சரயூ
எண்ணில் விழுந்த கணக்கைக் கடந்துபோய்
ஏற்றம் பெறும் சரயூ!''

''எண்ணங்கள் போற்குமிழ், எத்தனை எத்தனை
ஏந்தி தரும் சரயூ
வண்ணங்கள் வானில், வடிகின்ற காட்சியை
வாங்கித் தரும் சரயூ
தண்ணிழல் போன்று, தளிர்க்கரம் நீட்டித்
தவழ்ந்து செலும் சரயூ.
புண்ணியம் நீள்வது போன்ற புகழ்பெறப்
பொங்கி எழும் சரயூ''.

''கோலக் குமரியின், கூந்தல் விரிப்பெனக்
கோலம் பெறும் சரயூ
ஞாலைக் கருக்கலிற், புன்னகை காட்டி
நடந்த நதி சரயூ
நீலக் கடலை, நெருங்கிக் கதைசொல
நீந்திச் செலும் சரயூ
காலம் கிழித்தபொற், கோடெனக் கண்களிற்
காட்சி தரும் சரயூ.''

சரயூ நதியின் சிறப்பினைக் கூறியது போன்று, சாகேத நகரின் சிறப்பினையும் பாடுகிறார். அந்தச் சிறப்பிற்குக் களங்கமாக நிலவிவரும் சாதி வெறியையும் சாடுகிறார் கவிஞர்.

வேதியர் குலத்தில் பிறந்த அசுவகோஷ், புத்த சங்கத்தை சரணடைய நேர்ந்ததையும் உணர்ச்சியோடு சித்திரிக்கிறார். அங்கே, தருமசேனர் கூறும் அறிவுரைகளை அசுவகோஷ் ஏற்கிறான்.

வேதியர்களின் சுயநலத்தால், சூழ்ச்சியினால் சாகேத நகரம் சீரழிந்துகிடப்பதை உணர்கிறான்'

''ஆட்சிசெயும் சூதற்கே பதிகம் பாடி
அடிமைகளாய் ஏழைகளை மடியச் செய்தார்!
சூழ்ச்சி, பொய், கொலை, களவு, காமம் எல்லாம்
சூழ்ந்தனவாம் சாகேதந் துன்பம் எய்த!''

மேலும்,

அன்பில்லாத உள்ளம் பாலைவனம் போன்றது. அன்பற்ற அந்தணர் குலத்தில் உறவுகொள்ளத் தனக்கு விருப்பமில்லை யெனத் தாயின் உள்ளத்தில் பதியுமாறு கூறுகிறான்.

**அவளும், தன் மகன் கற்றவன், கவி வல்லான், கருணை வள்ளல், அவன் விருப்பம்போல் நடக்கட்டும் என ஆறுதலடைகிறாள்.**

பின்னர், தன்னுடைய காதலி ஊர்வசியைச் சந்திக்கிறான். உள்ளக்கிளர்ச்சி உரையில் வெளிப்படுகிறது.

அசுவகோஷ் : 'காதல் என்ற மதுவையுண்டு காற்றில்
நீந்துவோம்!'

ஊர்வசி : 'சாதல் கொள்ளும் உடல்வெறுத்துச் சாற்றை
மாந்துவோம்!'

அசுவகோஷ் : 'பெண்களில் பெரியவளே! பேயுரைகள்
ஏனம்மா?'

ஊர்வசி : பெண்களில் ஆண்களில் பித்துற்றார்
எத்துனைபேர்? அத்தனைபேரும்
அழிந்தார் அழிவிற்போய்!

காதலியின் உள்ளத்தை விரக்தி பற்றிக் கொள்ள எது காரணமென அறியமாட்டாமல் அவன் உள்ளம் அலைப்புறுகின்றது.

மறுநாள் காலை ஆற்றங்கரையில் ஒதுங்கிய ஊர்வசியின் உயிரற்ற உடலம் அருகே ஒருமடல் காணப்படுகிறது. எடுத்து வாசிக்கிறான் அசுவகோஷ். அம்மடலில்,

''சிறியவள் உறவால் உங்கள்
சிந்தனை மழுங்கும் என்றே
அறிந்தவர் கூற யானும்

*அவ்வுரை ஏற்றுக் கொண்டேன்!''*

..........

........

*''உலகெலாம் புகழுமாறே*
*ஒரு பெருங் கவிஞனாகி*
*இலகிய அறங்கள்போற்றி*
*இப்பெரும் சாகேதத்தைத்*
*திலகமாய் மாற்றவேண்டும்!''*

மடலின் வாசகங்கள் அவன் மனத்தைக் கொதிப்படையச் செய்கின்றன. முடிவில், ஊர்வசியின் வேண்டுதலை, ஏற்றுக் கொள்ளுகிறான். பின்னர்-

*''சிங்கம்போற் புறப்பட்டான் அசுவகோஷ்!*
*திசையெல்லாம் அவன்குரலே தெளிவு காட்டும்!*
*வங்கத்தார் மகதத்தார் கோசலத்தார்*
*வணங்க அவன் வான்போலே வருகைதந்தான்!*

.........

........

*''வேதங்கள் தோற்றோட வீரம் என்ற*
*விளைநிலத்திற் புதுவாழ்வு விரைந்து சேரச்*
*சீதமாம் மதிபோன்று சிறந்து தோன்றித்*
*திக்கெல்லாம் ஒளிகாட்டிப் புத்த ஞானப்*
*போதத்தைப் புவிக்கெல்லாம் புகல லானான்!''*
*''பொய்யொழிக! மெய்யெழுக!'' என்று பொங்கும்*
*நாதத்தைப் பரப்பினான்! அசுவகோஷின்*
*நல்லுரையை நம்செவியிற் சாற்று வோமே!*

-நூல் முழுவதும் கவித்துவம் ததும்பி வழிகிறது. சந்தங்கள் மாறுமிடமெல்லாம் புதிய சந்தங்கள் பொலிவுடன் எழுவது வியப்பூட்டுகிறது.

## 9. மாதவி காவியம்

ஐம்பெருங்காப்பிங்களில் சிறந்து விளங்கும் 'சிலப்பதிகார'த்தின் வழிநூலாய் எழுந்த எழிற்றமிழ்க் காப்பியமே 'மாதவி காவியம்'.

சோழ வளநாட்டில் கணிகையர் குலத்தில் பிறந்த மாதவியின் வரலாறு, சிலப்பதிகாரம், மணிமேகலை என இரண்டு காப்பியங் களிலும் சொல்லப்பட்டுள்ளது. அவற்றை நிரல்படுத்தி, நிகழ்ச்சிகளாக - காதைகளாக மாற்றிக் காவியமாக்கியுள்ளார் கவிஞர்.

அதனால், முதல் நூல்களில் இடம்பெற்றுள்ள கதை மாந்தர்களாம் மாதவி, கோவலன், வயந்தமாலை, சித்திராபதி, கூனி, அறவண வடிகள் மற்றும் கவிஞர் தாமாகப் படைத்த பாணன்அம்பலவாணன், திருக்கண்ணர், திருமுருகர் எனும் இருபுலவர்களும் 'மாதவி காவி'யத்தில் பேசப்படுகின்றனர்.

இந்நூல், புகார்க்காண்டம், பட்டினக்காண்டம், துறவுக்காண்டம் என வரும் மூன்று காண்டங்களையும், இருபத்தேழு காதைகளையும் உட்கொண்டு, ஓராயிரத்து ஒரு நூற்று ஐம்பத்தைந்து பாக்களால் இயற்றப்பெற்றுள்ளது.

இதன்கண், மரபுவழி அமைந்த ஆசிரியப்பா, கலிவெண்பா, வெண்பா, குறட்பா, கட்டளைக்கலித்துறை மற்றும் புதிய வண்ணங் களில் அமைந்த சந்தப்பாக்களும் இடம்பெற்றுள்ளன.

இந்நூலின் சிறப்பினை மேற்கோள் பாக்களால் முழுமையாகச் சொல்லுவதெனின், அதிகம் சொல்ல நேரும். பக்கங்களும் மிகுதியாகும்.

அதனால், காவிய நிகழ்வினை ஒட்டி சிலவற்றை மட்டும் எடுத்துரைப்போம்.

நூலின் தொடக்கச் செய்யுள்கள், 'ஞாயிற்றை வணங்கி, முதல் நூலாசிரியர் இளங்கோ அடிகளாரை வாழ்த்தி அமைந்துள்ளது.

ஞாயிற்றை வாழ்த்தும் பாடலில்-

''நீலமாய்க் கவிந்து வெள்ள
நீரெனப் பொலிந்து தோன்றும்
கோலமாய் வளைந்தகடல் மேலே-ஒளி
கொண்டுவரு கின்றகதிர் வேலே!''

-எனத் தொடங்கி,

''ஏழ்நிறம் படைத்த வில்லை
ஏந்திய வெயிற் குமரா!
ஊழ்கடந் தெமக்கருள்செய் வாயே!-ஓர்
ஊழிடை வளர்தெழுந்த நீயே

என முடிக்கிறார். அடுத்து,

'உளங் கோயில் என்றிருக்க
ஒருகடவுள் வாழ்கின்றார்!
இளங்கோ அவர்புகழை
இன்றுநாம் பாடுதுமே!'

என்று முதல் நூலாசிரியர் இளங்கோவடிகளைப் போற்றுதல் செய்கிறார். தொடர்ந்து,

'காவிரியும் ஆழ்கடலும்
காதல் மணஞ்செய்யப்
பூவிரியும் வண்ணப்
புகாரை நாம் பாடுதுமே!'

-எனப் புகார்க்காண்டத்தைத் தொடங்குகிறார்.

இங்கே முதல் காதையாக வருவது-'பூர்வ காதை'.

மாதவியின் பிறப்பு வழி யாதெனக் கூறும்போது, விண்ணிற் பிறந்த ஊர்வசி, இந்திரன் இட்ட சாபத்தால் மண்ணிற் பிறந்தாள் என்றும்;

அந்த ஊர்வசியைத் தங்கள் மரபின் மூத்த மகள் எனப் போற்றும் கணிகையர் குலத்திற் பிறந்தவளே 'மாதவி' என்றும் அறிமுகம் செய்கிறார்.

புகழ்மிக்க 'சித்திராபதி'யின் மகளாய்ப் பிறந்த மாதவி, அகவை ஐந்து தொடங்கி, அருங்கலையாம் ஆடற்கலையில் பயிற்சி பெறுகிறாள்.

அகவை பன்னிரண்டில் அவளது அரங்கேற்றம் நிகழ்கிறது.

இதனிடையே, வியப்புக்குரிய எழிலுடன் நாளும் வளர்ந்து வரும் மாதவி,

'குழல்மேகம் தவழ்கின்ற மாடமிது;
குளிர்மதியம் தோன்றுவதைக் கண்டீர் போலும்!
விழல் இல்லை! அவையாங்கே!வேற்கண் நங்கை,
விரிகின்ற குழலோடும் விளங்கு கின்றாள்!
ஓர்நாள்-

கன்னிமாடத்திலிருந்து கந்துகம் ஆடுகின்ற அவளை அவ்வீதி வழியே சென்ற அம்பலவாணன் எனும் பாணன், பார்த்து வியப்படைகிறான். அதனை கோவலனிடத்தும் கூறிவிடுகிறான்.

மாதவியின் சிறப்பை அறிந்த கோவலன், அவளை அடைய அவாவுகிறான். அரங்கேற்ற நிகழ்வின்போது அவளைக் கண்டு பரவசப்படுகிறான். மாதவியும்-

''நின்றானைக் கண்டாள்! நெருங்கும் விழிவழியே
சென்றானைக் கண்டாள் திருச்செல்வி - முன்றானை
முற்றிநெருடி முகங்கவிழ்ந்து காதல் நோய்
ஒற்றிநடந்தாள் உவள்!''

கோவலனும்-

''சென்றாள் பின்செல்லுந் திருவுள்ளம்! சீர்அரங்கம்
வென்றாள் பின்ஓடும் விழியினை-என்றால்பின்
என்னுண்டு வேறே இருக்க? - அவனுயிர்ப்
பொன்வண்டு பூவோடு போம்!

-பார்வையால் ஈர்ப்புண்டு, மனங்கலந்த மாதவியும் கோவலனும்,'மணம்புணர்காதை'யில் ஒன்று கூடுகின்றனர்.

இதனிடையே, அரங்கேற்ற நிகழ்வில், தலைக்கோற் பட்டம் எய்திய மாதவியை அடைய, 'பச்சைமாலை' விலைபேசப்படுகிறது.

அம்மாலையினை அம்பலவாணன் உதவியால் கோவலன் பெறுவதையும், கூனியுடன் செல்லும் அவனை இடைமறித்து,

இரண்டு புலவர்கள் 'அறம்' கூறுவதையும் அழகுற சித்திரிக்கிறார் கவிஞர்.

'மனம்புணர்காதை'யை அடுத்து வரும் 'நள்ளிருட்காதையில்', முன்னிரவில் முகங்காட்டிய நிலா மறைந்து, பின்னிரவில் பேய்க்காற்றுடன் பெருமழையும்' பெய்வதாகக் கூறுகிறார்.

வைகறைக் காதையில்,-

''இடருலகைப் போர்த்திருந்த இருட்போர்வை கிழித்தெறிந்து, கடலாடை சுடர்கொள்ளக் கதிர்க்கையால் ஒளியேந்தி ஞாயிறு தோன்றவும்,

'நேற்றிரவு பெய்த பெருமழையால் நெடுமரங்கள் வேர்பிளந்து வீழ்ந்துள்ளதாக' வயந்தமாலை, மாதவியிடம் கூறுகிறாள்.

கோவலன், வீதியிற் சென்று 'விழும் நிலையிலிருந்த ஒரு மரத்தைத் தாங்கிப் பிடிக்கிறான். பின்னர், பணியாளர்கள் வந்து உதவுகின்றனர். இக்காட்சியினை அங்கே வருகைபுரிந்த மன்னரும் கண்டு கோவலனைத் தழுவி பாராட்டுரைக்கிறார். இதுகண்டு மாதவி மகிழ்ச்சியடைகிறாள்.

அடுத்துவரும், 'அந்திமாலைச் சிறப்பு செய்காதை'யில் காதலர்கள் மகிழ்ச்சியில் திளைப்பதை 'கலிவெண்பா' சுவைபடச் சொல்லுகின்றது.

'அறவணவடிகள் அறங்கூறுகாதை' மாதவியின் வரலாற்றில் ஒரு திருப்பத்தை முன்மொழிகிறதென்றும் கூறலாம்.

மாதவியின் இல்லத்தில் அம்பலவாணனுக்கு விருந்தளிக்கிறான் கோவலன். விருந்துண்ட களிப்பில், சுவைமிகு' வாழையின் தோலை வீதியில் வீசுகிறான்' பாணன். அது வீதியிற் சென்ற அறவணவடிகளாரின் திருவோட்டில் விழுகின்றது.

அடிகளார் நின்றுவிடுகிறார். மாதவி வெளியில் வந்து, அவரிடம் மன்னிக்க வேண்டுகிறாள். அறவணவடிகள் அறம் கூறுகிறார்:

*'உயிர்எனும் நருங்கனி, உண்டிடுங் கூற்றுவன்*
*உமிழ்ந்திடுந் தோல்வண்ணம்,*
*பயின்றது! கண்களை ஈர்த்தது! முடிவினிற்*
*பாழ்த்தது பார்''* -என்றார்!

மேலும்,

***'இளமையை யாக்கையை நிலையெனல் வேண்டா***
***இவை மழை நீர்தங்கும்***
***குளமென முற்றிடும்! வெயில்வர வற்றிடும்!***
***கொள்கையின் வேறில்லை!'***

தொடர்ந்து அறவணவடிகள் கூறும் அறஉரைகள் 'குறட்பா'க்களாக இடம்பெற்றுள்ளன. 'மாதவி மகப்பேறு எய்துவள் என்பதும், அவள் 'மணிமேகலை' எனும் பேர் பெற்று விளங்குவாள் என அடிகள் கூறவும், கோவலன் கரங்கூப்பி வணங்குகிறான். அப்போது அவன் கைகள் நடுங்குவது கண்டு,

***'தீப்பயன் உன்னைத் தீண்டுதற் கூடும்!***
***தெரி''***

என்றார் அடிகள்!' மேலும்,

***'உன்திறன் அறிவேன்! ஓதிய கல்வி***
***ஒழுக்கம் இல்லாக்கால்,***
***புன்திறன் எய்தும்! புகழ்அழி வெய்தும்!***
***புரி!''***

என்றார் அடிகள்!

-முடிவில், திருவோட்டில் விழுந்த பழத்தோல் உணர்த்தும் பொருள் யாதெனில், 'பிறக்கும் புதல்வி, பற்றை அறுத்துப் பிறப்பாள், அவள் சொல்லாற் சிறக்கும் நெறிகள்' என்பதாம்.

மாதவியும் கோவலனும் வீதியில் நின்று, அடிகளாரிடம் உபதேசம் பெற்றதை கூனியும், நற்றாயும் கடிகின்றனர். அதனை வாய்ப்பாக ஏற்று, பாணன் பரிகசிக்கிறான். மாதவியும் வயந்தமாலையும் அதற்கு மறுப்புரைக்கின்றனர்.

இவ்வுரையாடல், நகைச்சுவை ததும்பும் பாக்களால் நயம்பட அமைந்துள்ளது.

'துயிலுணர் காதை'யில், மாதவி கனவு காண்பதும், அக்கனவில், புத்தர் போதனை புரிவதும் மாதவியை மயங்கச் செய்கின்றன.

'கனவு' பற்றி அறிந்த கூனி, 'இது திருவோட்டுக்கையன் (அறவணவடிகள்) செய்த 'சூது' என்கிறாள். கோவலன் நகைக்கிறான். மாதவியும் வயந்த மாலையும் உடன்சேர்ந்து சிரிக்கின்றனர்.

'மணிமேகலை காதையில்' மாதவி கருவுயிர்த்து மகப்பேறு எய்தலும், பின்னர் மகவுக்குப் பெயர்சூட்டுவிழா எடுத்தலும், அவ்விழாவில், வறியவர்க்குக் கோவலன் பொருள் வழங்குதலும்; பின்னர்-

குழந்தை மணிமேகலையைக் கோவலனும் மாதவியும் கொஞ்சி வளர்த்தமையும் இனிய பாக்களால் கூறப்பட்டுள்ளது.

ஆண்டுகள் பல கடந்த நிலையில், இந்திர விழா நிகழ்ச்சியில் மாதவி பங்கேற்கிறாள். விழா முடிவுற்ற நாளில்,

கோவலனும், மாதவியும் 'அத்திரி' குதிரைபூட்டிய 'கொல்லா' வண்டியில் ஏறி கடற்கரையை அடைகின்றனர்.

அங்கே, புன்னை மரநிழலில் அமர்ந்து யாழ் மீட்டிப் பாடுகின்றனர்.

முதலில் கோவலன் பாடுகிறான். அவன் பாடலைக் கேட்ட மாதவி, 'எவள் ஒருத்தியையோ மனம் கொண்டு இவன் பாடுகிறான்' என ஐயுற்று, யாழைத் தன் கரத்தில் வாங்கி,

'ஏவலால் யானும் அன்னோன் எதிர் எனப் பாடி, அன்பு மேவலால் காண்ப' னென்றே மாதவியும் பாடலானாள்.

அவள் பாடியது கேட்ட கோவலன், 'இந்திர விழாவில் ஆடிய இக்கணிகையின் நோக்கம் அயலவன்பால் நாடிற்றோ' என ஐயம் எழ தானும் அவ்விடம் விட்டு அகன்று போகிறான்.

இங்கே, 'சிலப்பதிகாரத்தில்' சிறப்பாக அமைந்துள்ள 'கானல்வரி' பாடல்களை மனம் கொண்டு போற்றிவந்த கவிஞர், தம்முடைய கருத்தாக சில பாடல்களையே பதிவு செய்துள்ளார்.

பின்னர், 'வேனிற்காதை'யில் அவள் உறும் பிரிவுத்துன்பத்தை உணர்ச்சிமயமான வண்ணப் பாக்களால் வெகு அற்புதமாகப் பாடியுள்ளார் கவிஞர்.

இப்பாக்களில் பெரும்பகுதி 'விதியோ, வீணையோ?' இசை நாடகத்தில் இடம்பெற்றுள்ளதையும் காணலாம்.

வேனிற் காலத்தில் காதலர்களிடையே பிரிவுத் துன்பத்தை வளர்த்து, அவர்களை மேலும் துன்புறுத்த வீதியில் மன்மதன் வருவதாக ஒரு கற்பனை உண்டல்லவா? இதோ, அவன் வருகையை உணர்த்தும் பாடல்:

''தாரகை மண்ணில் உதிர்ந்ததுபோல் - ஒரு
தையல் முறுவல் உதிப்பது போல்
ஈரமலர்கள் உதிர்ந்தன வாசலில்
இன்னிள வேனிலும் வந்ததடீ!

சாளரமீது தவழ்ந்த சிறுதிரை
தன்னை யகற்றிட ஞாலமிசை
வேளையும் வந்தது வேனிலும் வந்தது
வீதியில் மன்மதன் வந்ததென்றார்!

அந்திவேளையில் வாசலில் உதிர்ந்த மலர்களைப் பார்த்து அவள் வருந்துகிறாள். இரவுப்போதில் நிலவைக் கண்டு புலம்புகிறாள்.

தென்றல், அவளை வருத்துகிறது. குயிலின்குரல் நெஞ்சை குடைகிறது.
மாதவியின் 'எண்ணப் பறவை' எங்கெல்லாமோ சுற்றி அலைகிறது.
வானில் தவழும் முகில்கள், 'விதியென்ற ஒரு மூடன் விடுகின்ற காற்றாடி' யாகத் தெரிகிறது.

அந்த முகில்களை 'அவரிடம்' தூது அனுப்ப இயலுமா? 'சிந்தனையில் வந்த முகில் செந்தாழை மடலாகவும் தெரிகின்றது. புதிய தென்பு பிறக்கவும், மடல் ஒன்று எழுதி கோவலன் பால் அனுப்பி வைக்கிறாள். அதனைக் கொண்டு சென்ற வயந்தமாலை வெறுமையாகத் திரும்புகிறாள்.

அப்போதும்கூட ஏதோ ஒரு நம்பிக்கை எழுந்து மாதவியின் உள்மனத்தை சலனப்படுத்துகிறது.

'சிலப்பதிகார வேனிற் காதையில்',

''மாலை வாராராயினும் மாணிழை
காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு''

-எனக் கூறப்பட்டுள்ளதல்லவா?

அதற்கேற்ப, இக்காவியத்திலும் 'ஊடல்' நிலையானதல்ல, அதனைக் கடந்து 'கூடல் நேரும்' என ஆவல் மிக, யாழ் மீட்டிப் பாடுகிறாள் மாதவி. அந்தப் பாடல்:

''குயில்கூவித் துயிலெழுப்பும்!
கொம்பு மலர் கண்விழிக்கும்!
குளிர்ந்த தென்றல்,
வெயில்வருத்தம் நீங்கிடவே
வீசவரும், நிலாவந்து
விருந்து நல்கும்!

பயில்கின்ற கடலலைகள்
பாட்டுக்கு முத்தங்கள்
பரிசளிக்கும்!
உயிர்களெல்லாம் இன்பத்தால்
உளந்தழுவும் புகார்ப்பதியில்
ஊடல் ஏது?

மீன் உலகு முன்றிலிலே
மேல்பறந்து வருகின்ற
பறவை தன்னை
மான்கொம்பு போன்ற மலர்க்
கொம்பாலே மடவார்கள்
மறித்தவாறு
தான்என்ற அகங்காரம்
தலைதூக்கி நல்லன்பைத்
தடுத்தபோதும்

வான்பறவை யெனத்துள்ளி
வருங்காதல் நினைவை வழி
மறிப்பதேது?

இதற்குப் பின்னரும், மாதவியின் மனநிலையை உணர்த்த இரண்டு வெண்பாக்களை ஓதுகிறார் கவிஞர்.

'இருகரையும் தாவி எழுகின்ற வெள்ளம்
ஒருகரைக்கு மட்டும் உவப்போ-ஒரு துறையில்
பாடும்பொருள் உமக்குப் பாழ்பொருளோ?-மற்றெனக்கு
நாடும் நயமோ நவில்?

உள்ளமொன்றே! அவ்வுள்ளம் ஒப்பும் பொருள் ஒன்றே!
கள்ளமென்றே எண்ணிக் கலங்குவதோ-வெள்ளப்
பெருக்கு நெருப்பென்று பேதுறும் புள்ளைக்
கருக்கக் கனல் இல்லை காண்!

மனக்குரல் ஓய்ந்ததும், மாதவி, கோவலனை எண்ணுகிறாள். அவன், கண்ணகியுடன் மதுரை சென்று விட்டதை அறிகிறாள்.

அவ்வமையம், ஊரூராய்ச் சென்று சேதி உரைக்கும் 'கோசிகாமணி' என்பான் அவளைக் காண வருகிறான். அவனிடம், கோவலனுக்கு ஒரு மடல் எழுதி மதுரை சென்று சேர்க்குமாறு வேண்டுகிறாள். அவனும் மடலைப் பெற்று மதுரை செல்கிறான்.

ஆங்கே, மாதவிக் கொடிபடர்ந்த ஒரு பந்தற் கீழ் நிற்பவனைக் குறிப்பறிந்து, அவனை அறிய, மாதவியை நினைவூட்டும் சில வரிகளை இசையுடன் பாடுகிறான்.

நின்றவன் திரும்பக் கண்டு, அவனிடம், மாதவியின் மடலைத் தருகிறான். அம்மடலில்:

"பெற்றவர், பெரிதும் இன்னல், உற்றவர் தமைப்பிரிந்து
நற்றவத் துறவிபோன்று நலிந்துநீர் சென்றஆறும்,
கற்புடை மகளை அந்தக் கண்ணகி தெய்வத்தை நீர்
பிற்பட இட்டுச் சென்ற பெருந்துயர்க் கதையும் கேட்டுத்

துன்பத்துள் வீழ்ந்ததன்றி தொல்லையுள் ஆழ்ந்ததன்றி
இன்பத்தை அன்றிவேறே எதனையும் தராத நான்றான்
முன்பென்ன குற்றம்செய்தேன் முறைஏதும்
பிறழ்ந்ததுண்டோ?
அன்புளீர் எனைமன்னித்தே அடைகநும் இல்லம்-'

-எனக் குறித்திருந்ததை கோவலன் ஏற்று மனம் வருந்தினான்.

'கள்ளத்தால் அல்ல, கருத்தால் அவள் உயர்ந்தாள்!''

-எனக் கருதியவன்,

''எண்ண இனிக்கும் இனியமடல் இதனை
வண்ணக் கலாப மயில்வரைந்த வாசகத்தை
என்பெற்றோர் காண எடுத்துநீசெல்!' கென்றே
அன்போ டுரைத்தான் அகமகிழ்ந்த கோவலனே!

கோசிகாமணி, மடலுடன் ஊர்திரும்புகிறான்.

மதுரைப் பதியில், பொற்கொல்லன் உரைத்த பொய்யுரை கேட்டு, 'சிலம்பைத் திருடிய கள்வன் எனக்' கோவலன் கொலைக் களத்தில் வெட்டுண்டு மடிந்த செய்தி புகார் நகரை அடைகிறது.

செவியுற்ற மாதவி துன்ப மேலீட்டால் அழுது புலம்பி அரற்றுகிறாள். முடிவில், நலன்கள் அனைத்தையும் துறந்தவளாய் புத்தசங்கத்தைச் சரணடைகிறாள். அவள் வழி, மகள் மணிமேகலையும் துறவியாகிறாள்.

இரண்டு வெண்பாக்களை ஓதி காவியத்தை முடித்துள்ளார் கவிஞர்.

**-வெண்பா-**

பூம்புகார் பெற்ற புதல்வி புவனங்கள்
தேம்பப் பிரிந்த திருச்செல்வி - மேம்பட்ட
நூலோர்கள் ஏற்று நுவன்ற துறவேற்றாள்
மேலோர்கள் மேற்றே புகழ்!

சின்னக் கணிகை எனத்தோன்றிக் கோவலன்

*சொன்ன கருத்தில் துயரெய்தி - அன்னந்தன்*
*காதலன் வீழக் கடுந்துறவை மேற்கொண்டாள்*
*மாதவியும் மாதவமும் காண்!*

இதுகாறும் சொல்லப்பட்ட ஒன்பது காப்பியங்களில் 'புத்தர் பிறந்தார்' தவிர ஏனைய எட்டு காப்பியங்களும் காதற் காப்பியங்களே.

இதில் வரும் காதலர்கள் யாருமே இணைந்து வாழவில்லை.

அவர்கள் கொண்ட காதல் முறிக்கப்பட்டதாகவே கதைகள் அமைந்துள்ளன.

'விதியோ, வீணையோ?', 'மாதவி காவியம்' நூற்களில் மட்டும், கோவலன் - மாதவி பால் கொண்ட மையல், ஊழ்வலி காரணமாய் முறிந்ததாக முதல் நூலாம் 'சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள முடிவே இவ்வழி நூல்கள் இரண்டிலும் உறுதி செய்யப்பட்டுள்ளது.

மற்ற காப்பியங்களில் - 'கவிஞனின் காதல்' முதன்மையானது. கதையுடைத் தலைவன் அழகன் என்பான் மன்னன் மகள் அமுதம் பால்கொண்ட காதல், தோணிநாட்டு மன்னன் செய்த சூழ்ச்சியினால் முறிக்கப்படுகிறது.

இரண்டாவது நூல் - நிலைப்பெற்ற சிலையில் வரும் மருதவாணன் - வஞ்சியின்பால் கொண்ட காதல் அவர்கள் பெற்றோர்களின் பேராசையினாலும், சாதிச்செருக்காலும் முறியடிக்கப்பட்டது.

மூன்றாவது நூல்-'வீராயி' வாழ்க்கைப் போராட்டத்தைச் சித்திரிக்கும் காப்பியம்.

இங்கே வாழ்வுரிமை பறிக்கப்பட்ட 'வீராயி' தன்னை மாய்த்துக்கொள்ள முற்படுங்கால், ஆனந்தன் வாழ்வளிப்பதாக உறுதிமொழிகிறான்.

அவர்களிடையே அரும்பும் காதலை, ஆனந்தன் தந்தையாரின் சாதி ஆணவம் அழித்துவிடுகிறது.

நான்காவது நூல், 'மேதின ரோஜா'வில், கண்ணன் - ராதையிடையே உறவு வழிவந்த காதல்.

இருவரும் மணமேடையில் இருந்தபோது, 'சுக்கிரன்' சேரி தீப்பற்றிய செய்தி கேட்டு, கண்ணன் எழுந்து செல்லவும்,

'மணவேளை' தவறியதால், திருமணம் தடைப்பட்டுப் போகிறது. மணமகள் ராதை மனம் வருந்தி நோயுற்று மடியவும், அவளுடைய தந்தையார் கண்ணனைப் பழிதீர்க்கவும், அவர்கள் கொண்ட காதல் மரணத்தைத் தழுவுகிறது.

ஐந்தாவது நூல்: 'கண்ணப்பன் கிளிகள்', இதில் வரும் 'குற்றம் என்ற பெண்கிளியும், 'குணம்' என்ற ஆண்கிளியும் காதலர்கள்.

இவ்விரு கிளிகளையும் கூட்டில் அடைத்து வைத்து வளர்த்துவந்த கண்ணப்பன், அக்கிளிகளைப் பிரித்து வைக்கவும், அவை பிரிவுத் துன்பத்தால் பெரிதும் வருந்தி உள்ளம் ஒடுங்கி உயிர்த்துறக்கின்றன.

ஆறாவது நூல்-'கோசலக்குமரி' வடமொழிக் கவிஞன் அசுவகோஷ் யவனப்பெண் ஊர்வசியைக் காதலிக்கிறான். அதனைப் பொறுக்காத 'பேர்வழி பார்ப்பான்' என்பார் சூழ்ச்சி செய்து, காதலை மறுக்குமாறு ஊர்வசியைத் தூண்டவும், அவள் நதியில் வீழ்ந்து மாய்கிறாள். அசுவகோஷ் புத்த சங்கம் சார்ந்து துறவியாகிறான்.

இங்கே வளர்ந்த காதலை வழிமாற்றி அழிக்கிறது சாதி வெறி.

ஆக, ஈருடல் ஒருயிராய் மாறி வளரும் காதல், எப்போதுமே வழிமாற்றப்பட்டு, மரணத்தைத் தழுவும் என்பதே இக் காவியங்களின் முடிவாயமைந்துள்ளன. இம்முடிவு, துன்பியல் சார்ந்தவை.

கவிஞர் தமது சொந்த வாழ்க்கையில் மகிழ்ச்சியில் திளைத்தவரல்ல என்பதும், அவர்தம் வாழ்வும் துன்பியல் சார்ந்ததே என்பதும் நாம் அறிந்த உண்மைகள் அல்லவா?

# 4

# கதைகள்

தமிழ்ஒளியின் உரைநடை படைப்புகள் நான்கு பிரிவுகளில் அடங்கும்.

அவை, கதைகள், நாடகங்கள், விமர்சனக் கட்டுரைகள், ஆய்வுக்கட்டுரைகள் என்பனவாம்.

இங்கே, கதை படைப்புகளை முதலில் காண்போம்.

துப்பறியும் கதைகள் பிரபலமாகி வந்த காலகட்டத்தில், தமிழ்ஒளி இரண்டு நூல்களைப் படைத்தார் ஒன்று, : 'மூன்று ஆள்களும் ஒரு பெண்ணும்'; இரண்டு: 'மாமாவின் சாகசம்'.

இவ்விரு நூல்களும் இப்போது பார்வைக்குக் கிடைக்கவில்லை. அதனால், அது குறித்துப் பேச இயலவில்லை.

1948-49களில் 'முன்னணி' ஏட்டில் அவர் படைத்த கதைகள், 'சாக்கடைச் சமுதாயம்' என்ற தலைப்பில் 1952இல் சிறு நூலாக வெளிவந்தது. பின்னர், மேலும், சில கதைகள் சேர்க்கப்பட்டு 1989இல் 'உயிரோவியங்கள்' பெயரில் அந்நூல் புதுப் பொலிவுடன் வெளிவந்துள்ளது.

1955-60களில் அவர் படைத்த சிறு கதைகளின் தொகுப்பாக 'குருவிப்பட்டி' என்ற தலைப்பில் நூல் ஒன்றும் வெளிவந்தது.

இவ்விரண்டு நூல்களிலும் இருபத்து மூன்று சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் மனிதநேயத்தை வளர்க்கவும், மனித உரிமைகளை மீட்டெடுக்கவும் போர்க்குணத்துடன் எழுதப்பட்டுள்ள மூன்று கதைகளை மட்டும் இங்கே தொட்டுக்காட்ட விரும்புகிறேன்.

### 'குற்ற பரம்பரை' (1949)

(கதைச் சுருக்கம்)

''ஆட்டுக்குட்டியின் தகப்பனோ, அல்லது பாட்டனோ ஒரு காலத்தில் ஓடை நீரைக் கலக்கி விட்டிருக்கக் கூடும் என்று

ஆட்டுக்குட்டியின் மேல் குற்றம் சாட்டியது ஓநாய். வெள்ளைக்கார பிரபு ஓநாய்க்கு இளைத்தவனல்ல, பொதுவாகவே பணக்கார கும்பல் ஓநாய்களுக்குச் சப்பையல்ல-''

இந்த நிலைப்பாட்டில், பிரிட்டிஷ் அரசாங்கம் கொண்டுவந்ததே 'குற்ற பரம்பரைச் சட்டம்'

காலங்காலமாக கொத்தடிமைகளாக வாழ்ந்துவரும் 'குறவர்களை' இந்தச் சட்டம் நிரந்தரமாகப் பாதிப்புக்குள்ளாக்கி வந்தது.

போலீஸ்காரராக வேலை பார்ப்பவர், தினமும் ஒரு குற்றவாளியைச் சட்டத்தின் முன் நிறுத்தவேண்டியது அவருக்குள்ள கட்டாயக் கடமை.

குற்றம் செய்தாலும், செய்யாவிட்டாலும் சந்தேகத்தின் பேரில் 'குறவர்'களைச் சட்டத்தின் முன் குற்றவாளிகளாக நிறுத்தும் வழக்கத்தினைக் 'குற்ற பரம்பரைச் சட்டம்' போலீசாருக்கு வழங்கியிருந்தது.

இந்தக் கதையில் வரும் 'குப்பன்' எந்தக் குற்றமும் செய்யவில்லை. அவனை 'மூணுசீட்டு' ஆடியதாக ஒப்புக் கொள்ளும்படி போலீசார் நிர்ப்பந்தித்தனர். அவன் மறுக்கவே இரவு முழுவதும் போலீஸ் ஸ்டேஷனிலேயே அவனை இருக்கச் செய்தனர்.

குப்பன் மனம் குமுறியது. பெட்டிக்குள் அடைபட்ட பாம்பைப்போல பெருமூச்சு விட்டான். அது பெருமூச்சில்லை, ஆத்திர நெருப்பிலிருந்து கிளம்பிய புகைச்சல்' என்கிறார் கவிஞர்.

''தகப்பன் பெரியகுப்பன், குடித்துவிட்டு அட்டகாசம் செய்தான், பெரியகுப்பனின் முப்பாட்டன் ஒரு கோழிக்குஞ்சைப் பிடித்துவிட்டான். இத்தகைய காரணங்களால், இந்தக் குலம்- அவர்களின் பரம்பரை, குற்ற பரம்பரையாகத் தீர்மானிக்கப் பட்டது'' என்பதை அவன் எண்ணிப் பார்க்கிறான்.

''என்னுடைய பாட்டன் துன்பத்தால் செத்துப் போனான்; தகப்பனும் அதே துன்பத்தால் நோய்கண்டு இறந்து போனான். நானும்... இனி என் மனைவி மக்களும்...

மனித உணர்ச்சியை வெளிப்படுத்தும் கண்ணீர் அவன் கண்களை நனைத்தது.

வானம் இருண்டது. மழை பெய்தது. பூமியின் மடியையும் இன்னும் சிறிது நேரத்தில் மழை நனைத்துவிடும். பூமியை அன்றி

வேறு துணையற்ற அவன் மனைவி, மக்கள் எங்கே தங்குவார்கள்? அவன் மனம் பதறியது.

தன் மனைவி மற்றொரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாள் என்று நினைத்து அவன் மகிழ்ச்சியடைந்தான். அடுத்தகணமே அவன் அந்த நினைவை அழித்துவிட்டான்.

'மேலும் குற்ற பரம்பரையில் சேர்க்க ஓர் உருப்படி' என்று சட்டம் கூச்சலிடுகிறது.

'இல்லை, அது களங்கமற்ற குழந்தை' என்று குப்பன், தந்தையின் வாத்சல்யத்தோடு கூறுகிறான்.

'அதைக் கஷ்டப்பட்டு வளர்த்த பிறகும், அதன் தலைவிதியும் போலீஸ் ஸ்டேஷனில்தான்!' இது, அவன் மனைவியின் குரல்.

'பாம்புக்குக் கூட தன் புற்றில் உறங்க உரிமையுண்டு...நான்... என் மனைவிமக்கள்!' குப்பனுடைய இதய ஆழத்தில் எழுந்த கேள்வி!

பூமியை மூழ்கடித்து விடுவதைப்போல் மழை அதிகரித்தது.

'நான் ஓடி என் மனைவியைப் பார்க்கவேண்டும். அவள் பிரசவ வேதனையால் துன்பப்படுவாள்..'

குப்பன் ஒரு கணம் இப்படி நினைத்தான். அவன் காதில் போலிஸ்காரனின் குரல் பேசியது:

''நீ, 'குற்றபரம்பரையைச் சேர்ந்தவன். உனக்கு உன் இஷ்டப்படி எதுவும் செய்ய உரிமை கிடையாது.''

போலீஸ்காரன் கையில் சுதந்திரக் கொடி பறந்து கொண்டிருந்தது.

இப்போது சுயராஜ்யம் நடக்கிறதல்லவா? இப்பொழுதும் நான் குற்ற பரம்பரையைச் சேர்ந்தவன் தானோ?'

குப்பனின் வெறுப்பையும் ஆத்திரத்தையும் இந்தக் கேள்வி கிளறிவிட்டது.

'பணக்காரன் ராஜ்யத்தில் ஏழைகள் எல்லோரும் 'குற்ற பரம்பரை'யைச் சேர்ந்தவர்கள்தான்!'

இப்படி சொல்வதைப் போல் வானம் இடிமுழக்கம் செய்து நகைத்தது. அது காலதேவனின் கோபச் சிரிப்பு.

கோபச்சிரிப்பின் எதிரொலியைப் போல் குப்பனின் குரல் கேட்டது:

''அந்த ராஜ்யம் ஒழியட்டும்! பணக்காரன் ராஜ்யம் ஒழிந்துபோகட்டும்!'

குப்பன் திடீரென்று எழுந்து நின்று கூச்சலிட்டான். போலீஸ்காரர்கள் விழித்துக்கொண்டு தடியுடன் ஓடி வந்தார்கள். அவர்கள் கண்முன்னே குப்பன் வெறிபிடித்தவனைப் போல வெளியே பாய்ந்தான்.

அப்போது, மண்ணையும் விண்ணையும் ஒரே அடியால் அளந்து விடுவதுபோல் ஒரு மின்னல் மின்னிற்று. அந்த வெளிச்சத்தில், காட்டுப் புதர்களைப் பிளந்து செல்லும் வேடனின் அம்பைப்போல், மழையைப் பிளந்துகொண்டு அவன் ஓடினான்.''

**'நினைவு நட்சத்திரம்' 1949**

(கதைச் சுருக்கம்)

''மாலை நேரம். மேற்றிசையில் அந்த நட்சத்திரம் கண் சிமிட்டுகிறது. எனக்கு இப்பொழுது பல நினைவுகள் உண்டாகின்றன. பழைய சம்பவங்கள் என் மனக் கண்முன்னே ஒவ்வொன்றாகத் தோன்றுகின்றன.''

''மனிதர்களாகப் பிறந்தும், மனிதர்களாக வாழ இயலாத துர்ப்பாக்கியசாலிகள் அந்தக் குடிசைகளின் சொந்தக்காரர்கள்.''

''அவர்களில் ஒரு கிழவனின் சரித்திரம் மட்டும் எனக்குத் தெரியும். அவன் மகன், கிராமத்துச் சூழ்நிலையிலிருந்து தப்பித்துக் கொண்டு, பட்டணத்துப் படிப்பு வாசனையை மோப்பம் பிடித்து, எப்படியோ தட்டுத்தடுமாறி, எங்கெங்கோ ஊர் சுற்றித்திரிந்து, பல பேர்களைப் பழக்கம் பிடித்து, அவர்களின் உதவியுடன் தமிழ்க் கல்லூரியில் படிப்பதற்கு வந்து சேர்ந்தான்.''

''வந்ததும் வராததுமாக அவனுக்கும் எனக்கும் சிநேகம் தொத்திக்கொண்டது. அது வளர ஆரம்பித்து, மற்றவர்களின் கவனத்தைக் கவரக்கூடிய அளவுக்கு விரிவடைந்தது. அவன் அனுபவங்களை என்னிடம் சொல்லத் தொடங்கியபோது நான் மயங்கிப்போனேன்.''

''பிறந்த கிராமத்தைப் பற்றிச் சொல்லும்போது, அவன் தந்தையின் நிராதரவான நிலையும், தரையோடு தரையாய்க் குனிந்து கொண்டிருக்கும் பனையோலைக் குடிசைகளும் என் மனதை உறுத்தும். இவ்வாறே நானும் அவனும் இணைபிரியாத நண்பர்களாகி ஏதோவொரு இனிமையான உலகை நோக்கிப் பிரயாணஞ் செய்துகொண்டிருந்தோம்.''

''கோடை விடுமுறை வந்தது. நாங்கள் கிராமத்திற்குப் புறப்பட்டோம். ஒருநாள் ரயில் பிரயாணம்! அரைநாள் பஸ் பிரயாணம்; அதற்கும் அப்பால் கால்நடைப் பிரயாணம்! இவ்வாறு இரண்டு நாளும் சிலமணிநேரமும் பிரயாணஞ் செய்துகிராமத்தின் எல்லையை மிதித்தோம்.''

''அதோ தெரிகிறதே மேடு, அதைத்தான் வாய்க்கால் மேடு என்று சொல்லுவார்கள், வாய்க்காலில் இப்போதுகூட நீர் ஓடிக் கொண்டிருக்கும்!' அதைத் தாண்டிச் சென்றால் முன்னே தோப்புகளும் பின்னே பனைமரச் சாலையும் இருக்கும்.''

''பனையோலைக் குடிசைகள் தெரிகின்றனவா' என்று நான் கூர்ந்து நோக்கினேன். அவன் என் தலையை வலது கைப்பக்கம் திருப்பி, 'அதோ பார் குடிசைகள்' எனச் சுட்டிக் காட்டினான்.''

நாங்கள் குடிசைகளுக்கு முன்னேபோய் நின்றோம். அங்கே யாவரையும் காணவில்லை. குடிசைகள் பூட்டப்பட்டுக் கிடந்தன. அவன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, எதிர்த்திசையை என்னிடம் சுட்டிக்காட்டி, ''அதோ அங்கே கும்பலாயிருக்கிறார்கள்; அதுதான் சுடுகாடு, வா அங்கே போகலாம்'' என்று சொல்லிக் கொண்டே விரைவாக நடந்தான்.

மணற்பரப்பில் விரைவாக நடக்க முடியாமல், நான் அவன் பின்னே ஓட்டமும் நடையுமாகச் சென்றேன். எங்கள் கால்கள் சுடுகாட்டின் வரம்பை மிதித்தன. சுடுகாடு மேடாக இருந்தது. அவன் பரபரப்பாக மேட்டில் ஏறினான்.

அங்கே கூடியிருந்தவர்களுக்கிடையில் பச்சை மண்ணாலான சமாதி ஒன்று ஏதோ ரகசியத்தை அடக்கிவைத்துக் கொண்டிருப்பதுபோல் மௌனமாகவும், ஆனால் உயர்ந்தும் காணப்பட்டது. அதன்மேல் எரியும் வத்தியிலிருந்து கிளம்பிய புகை, காற்றைப்போல் இலேசாக மேலே கிளம்ப முடியாமல் துக்க நினைவுகளைப் போல் தரையை நோக்கி ஊர்ந்து கொண்டிருந்தது-

ஒருவன், துக்கமும் பரிவும் நிறைந்த குரலில் இதயத்திலிருந்து பீறிட்டு வரும் உணர்ச்சியுடன் பிரசங்க தோரணையில் பேசிக் கொண்டிருந்தான்.

''நாம் காலகாலமாகப் பனைமரச் சாலையில் குடியிருக்கிறோம், இப்போதுதான் காட்டுப்பாக்கம் மிராசுதார் நம்மிடம் புது சம்பந்தம் கொண்டாட வருகிறார். பொட்டல் மண்ணைத் திருத்தி பயிர்

செய்தால், அதில் 'வாரம்' கேட்கிறார்; உரிமையைக் கேட்டதற்காக, கருப்பக் கோனார் கொலை செய்யப்பட்டார்.''

இது என்ன விவகாரம்? என்று கேட்டுக்கொண்டே என் நண்பன் கையைப் பற்றினேன். அவன் உடல், மின்சாரம் தாக்கியதைப்போல் துடித்தது... இதயத்தைக் கிழிக்கும் சோகப் பெருமூச்சுடன் 'அப்பா' என்று கதறிக்கொண்டே அவன் சமாதியை நோக்கி ஓடினான். அடுத்த கணம் அவன் கைகள் சமாதியைத் தழுவிக்கொண்டன. எங்கள் எல்லோருடைய கண்களிலும் நீர்துளிர்த்தது...

பிள்ளையின் பாசத்தைப் போல அவன் கண்ணீர் பிரவாக மெடுத்தது. தந்தையின் அன்பைப் போல் ஈரமண் அவன் மார்பை நனைத்தது. எதிர்திசையில் இருள் சூழ்ந்து கிடக்கும் குடிசைகளுக்கும் மேலே அந்த நட்சத்திரம் மறைந்துபோன அவனுடைய தந்தையின் பார்வையைப் போல் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது...

சமாதிக்குள்ளே இறங்கி, தந்தையின் உடலைத் தழுவி ஆன்மாவிலே கலக்க முயற்சிப்பதைப்போல் அவன் கண்ணீர் பிரவாகம் எடுத்தது. கண்ணீர்த்துளி வத்தியின்மேல் விழுந்து, நெருப்பை அணைத்தது. கரிந்துபோன வத்தியின் கடைசிப்புகை தந்தையின் கடைசி மூச்சைப்போல், மகனுடைய முகத்தை வட்டமிட்டு மறைந்தது...

அங்கே கூடியிருந்தவர்கள் மௌன இருள் படிந்த முகத்துடன் சோக வடிவங்களாக மாறினர். நான் கல்லாய்ச் சமைந்து சமாதியின் அருகில் உட்கார்ந்து கொண்டிருந்தேன்!'

இது நடந்து எட்டு வருஷங்கள் ஆகின்றன. இப்போது நான் எழுத்தாளனாகப் பட்டணத்தில் வாசஞ் செய்கிறேன். அவன் காட்டுப்பாக்கத்தில் எனக்கும் உங்களுக்கும் உணவை உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்குத் தொண்டு செய்து வருகிறான்.

**'குருவிப்பட்டி' - *1960***

(கதைச்சுருக்கம்)

குடியுரிமை, நாடு முதலியவற்றினின்றும் அப்பாற்பட்டவர் களுக்குக் குருவிக்காரர்கள் என்று பெயர். காடுகளில் சுற்றி நரியை வேட்டையாடும் அம்மக்களை நரிக்குறவர்கள் என்றும் அழைப்ப துண்டு.

ஆண் என்றும் பெண் என்றும் பேதமற்றுத் திரியும் அக்குறவர் அழுக்கடைந்து, தூசி படிந்து, துர்நாற்றம் வீசக் கும்பலாய் வரும்போது - கள்ளங்கபடமற்ற உண்மை, சேற்றில் புரண்டு, முகத்தில் கரியைப் பூசிக் கொண்டு வருவதுபோல் இருக்கும்.

ஊரில் நாய்கள் குரைத்தால், சிறுவர்கள் திரண்டு ஓடினால், அது குருவிக்காரர்களின் வருகையைத் தெரிவிக்கும் சமிக்ஞைதான்!

இந்த வர்க்கத்தைச் சார்ந்த அண்ணாமலையான், ஒரு குரங்குக் குட்டியுடன் பக்கத்து கிராமத்திற்குச் சென்று சிறுவர்களுக்கு வித்தைகாட்டிக் கொண்டிருந்தான்.

'ஆடுடா ராமு ஆடு - பாடுடா ராமு பாடு'

'தாண்டுடா ராமு தாண்டு' என ஒரு கொம்பைத் தாண்ட வைக்கும்போது - ராமாயணக் கதையை நாம் மறந்து விடுவோம். அதற்கு மாறாக - வறுமைக்கடல் விரிந்து கிடப்பதையும், அதைத் தாண்ட முடியாமல், ஏழை மக்கள் பசி என்ற கோலைத் தாண்டிக் குதிப்பதற்குப் படும் பாட்டையும் காண்போம்...

சிறுவர்கள், கைதட்டி, ஒலியெழுப்பினர். 'தாண்டுடா ராமா...' என்று அவர்கள் கூவியபோது, குரங்கு பல்லையிளித்தது! தாம் சொன்னபோது, தாண்டாத குரங்கின் மேல், ஊர்ப்பிள்ளைகட்குக் கோபம் பிறந்தது. அவர்களுள் துடியான ஒருவன், தெருக் கோடிக்கு ஓடி, தொழுவத்திற் கட்டப் பெற்றிருந்த காரிக் காளையை அவிழ்த்துவிட்டுக் கூட்டத்தின் பக்கம் விரட்டினான்.

அவ்வளவுதான் - அது 'புஸ்' என்று மூச்சுவிட்டுக் கொண்டு, வாலை ஆகாயத்தில் கிளப்பியவாறு பாய்ந்து வந்து, குரங்குக் குட்டியின் முன் கொம்பை நீட்டி...''ஐயோ! கீ...ஈச்...ஆவ்...ஓஓ!''

அண்ணாமலை அருகில் இருந்த பள்ளத்தில் உருண்டு வீழ்ந்தான். காளை, தன் கொம்புகளிற் குரங்கைக் குத்தி எந்தியவாறு, ஊரைத் தூள்படுத்திக் கொண்டிருந்தது.

மணியக்காரரும், அவர் ஆட்களும் ஓடிவந்து, தம் அனுமதியின்றி ஊரினுள் நுழைந்ததற்காக... அண்ணாமலையை இழுத்துச்சென்று, கட்டிவைத்து அடித்தனர். அவனை மணியக்காரர் காலில் விழச் செய்து மன்னிப்பளித்தபின், 'ஓடிப்போ! என்று விரட்டினர்.

அவன் ரத்தம் கசியும் உடலுடன், வேதனை தெறிக்கும் விழிகளுடன், திசைகளைக் கடந்து ஓடவேண்டும் என்ற எண்ணத்துடன் ஓடினான்.

அவன் காலிடறி வீழ்ந்தான்... வீழ்ந்து விட்டதை அவன் உணர்ந்தான். ஆனால், அவன் கால்கள் ஓடிக்கொண்டிருந்தன... எங்கே?

காட்டை நோக்கி ஓடிய அண்ணாமலை, காட்டின் எல்லையிலே காலிடறி வீழ்ந்து மூர்ச்சையுற்றுக் கிடந்தான்.

காட்டருகே, வீட்டு நெறியை நோக்கி அண்ணாந்து பார்த்தவாறு நின்ற ஒரு குன்றின்மேல் ஆசிரமம் ஏற்படுத்திக் கொண்டு, வாழ்ந்து வந்தார் துறவி.

குறச்சிறுவன் மூர்ச்சையுற்றுக் கிடந்ததை அவர் பார்த்தார். தன் கமண்டலத்தைக் கவிழ்த்து, நீரைக் கையில் நிரப்பிக்கொண்டு சிறுவன் முகத்தில் தெளித்தார். அவன் தலையை மெல்ல வருடிக்கொடுத்தார்...

சிறிது நேரத்திற்குள், சிறுவன் கண் விழித்தான். அவன் தன் கண்களைத் திறந்துகொண்டு, சாமி! நான் நரிக்குறவன் என்னைத் தொடாதீங்க... நான் ஓடிப்போறேன்...'' என்று கத்தினான்.

''தம்பி, பயப்படாதே தண்ணீர் குடி'' என்று கமண்டலத்தில் மீதமிருந்த நீரை, அவன் வாயில் புகட்டினார். அவன் வேட்கையோடு நீரைக் குடித்தான்.

அது. தண்ணீர் அல்ல! அது மரணத்தை வென்று உயிர்கொடுத்தது... குரங்கை, மனிதன் ஆக்கியது. மனிதனை- உண்மை மனிதன் ஆக்கியது...

அண்ணாமலை எழுந்தான்... வணங்கினான். 'சுவாமி, நான் குறவன். என் பெயர் அண்ணாமலை... என்குரங்கை மாடு குத்தி விட்டது... என்னை மணியக்காரர் குத்திவிட்டார்...'' என்று தெளிந்த தமிழில் பேசினான்... அவன் தலைக்குமேல், ஞானச் சுடர்போல், விண்மீன் ஒன்று பளிச்சிட்டது...

துறவி அண்ணாந்து பார்த்தார்... தாடியை வருடியவாறு சிரித்தார்... பற்கள் இருளில் மின்னின... ''மாடுதான் மடமை... குரங்குதான் இதயம்... மணியக்காரர்தான் அகங்காரம். நீ தான் அன்பு... அண்ணாமலை, நீ, தீபத்தில் பிறந்தாய்...

காட்டு விறகில், தீ தாவிப் பிடிக்கிறது... திருவண்ணாமலையில் தீபம் பற்றுகிறது. காடும், திருவண்ணாமலையும், ஒன்று... குறவரும் விறகும் ஒன்று... தீபமும் நீயும் ஒன்று... எழு!விழி!தெரி!ஞானம் பெறு!'' என்றார்.

அண்ணாமலை துறவியைப் பின் தொடர்ந்தான். அவன் கைகளில் சிறு விறகுக்கட்டு...

மடமையைச் சுள்ளிகளாய் ஒடித்து, எரிக்கக் கற்றுக்கொள். அன்பினின்றும் எழுகின்ற குளிர் நெருப்பால், உலகம் ஒளிபெறும். யாரையும் அது தொடும். ஆனால், சுடாது...

மனிதருள் பேதம், காட்டு விலங்குபோல் மறைந்திருக்கும். ஆனால்,தீயினுள் அழுக்குமறைய முடியுமா? புதிய தீபத்தை ஏற்று... எரி...' என்றார் துறவி.

''சுவாமி, நான் உணர்ந்தேன்'' என்றான் அண்ணாமலை.

''குரங்கினின்றும் மனிதன் பிறக்க முடிந்தால், மனிதனிலிருந்து, ஏன் மற்றொரு மனிதன் பிறக்கக் கூடாது?

''வினா அறிந்தேன்... விடையறிந்தேன்... இருளிடையே ஒளியைக் கண்டேன்'' என்று வணங்கினான் அவன்.

அன்று தொட்டு, அவனுக்கு எழுத்துத் தீட்சையைத் தொடங்கினார் துறவி.

''எழுத்துக்கள் என்பவை வெறும் குறிகள்... குறிகளைக் கண்களாற் கண்டு, இதயத்தால் படி....'' என்றார் துறவி.

காவியுடைத் தரித்த இளந்துறவியாகிக் குன்றின்மேல் நடைபயின்று, விறகு சேர்த்து, எரியூட்டி, நிட்டைக்குக் கட்டி, காலை, மாலை ஆகிய வேளைகளில் பயின்று எழுத்துக் கூட்டிப் பொருள் புரிந்துகொண்டான்.

காட்டு வாழ்க்கையும் நாட்டு வாழ்க்கையும் கற்றுக்கொடுக்க இயலாத உண்மைகளை, எழுத்துக்கள் அவனுக்குக் கற்றுக் கொடுத்தன. அவற்றை இதயத்தில் சேர்த்தபோது, உதயம் பிறந்தது-ஆம், புத்தம் புதிய உதயம்... அருள்பெற்ற ஞானக்கண்களில் வெடித்த உதயம்...

இருள் இல்லை... பகையில்லை... குருவிக்காரர்கள், குரங்குகள், நாட்டு மக்கள், அயல் நாட்டு மக்கள், உயிர்த்திரள் ஆகிய அனைத்தும், ஒரே சங்கிலியில் பிணைந்து, யாரும் பிரிக்க முடியாத தொடர்பு பூண்டு, குன்றிலும், காட்டிலும், குளத்துத் தெருவிலும் கைகோத்து நிற்கும் காட்சி... ஆம், அவன் ஞானம் பெற்றான்.

ஒருநாள் துறவி அவனை அழைத்தார்.

அண்ணாமலை சற்று வளர்ந்திருந்தான். மீசை, அரும்பு தட்டியிருந்தது. எரிமுன் இருந்து பயின்று, நிட்டை பூண்டதால் ஏற்பட்ட ஒளி, தேகத்தைச் சுடர் மயம் ஆக்கியிருந்தது. அண்ணாமலை, துறவி முன் கைகுவித்து வணங்கி நின்றான்.

'என் காரியம் முடிந்துவிட்டது. ஆனால், இன்னும் சாதனை முடியவில்லை... அவ்வாறே உன் பயிற்சி முடிந்துவிட்டது... இன்னும் உன் பணி முடியவில்லை... போ, உலகை நோக்கிப் போய் மனிதர்களை மனிதர்களாக்கு, மறந்துவிடாதே!''

'நீ கர்ம வீரன்... அமைதி நாடியநான் கிழவன். நீ, இளைஞன்... குன்றின் அமைதியை நான் கொண்டேன்... நீ கடலின் அலைகளில் குதித்து நீந்து... போ... மானிட சமுத்திரம் அழைக்கிறது... அதில் போய் சங்கமமாகு... ஓடு...'' என்று கூறினார் துறவி.

'சுவாமி! கட்டளை! இந்த ஏழையை மீண்டும் தங்கள் பாதகமலங்களில் சேர்க்கும் நாள் என்று?'' - அவன் குழறினான்.

அண்ணாமலை! ஒவ்வொரு தீபத்தின் போதும்,என்னைப் பார்க்கவா! திருவண்ணாமலைதான், உனக்குத் தேதி காட்டும் நாள்... உன் ஞானம் விதைக்கப்படவேண்டும். விண்ணில் அல்ல - நான் பைத்தியக்காரன்... அமைதியை நாடுகிறவன். நீ போ... போய்வா...'' என்றார்.

துறவியின் குரல் தழுதழுத்தது... அண்ணாமலை திக்குநோக்கி வணங்கினான். சிரம்மேல் கூப்பிய கையுடன் திரும்பி நடந்தான். அருள் விழிகளின் பார்வை, அவன் இதயத்துக்குள் வழிகாட்டக் கண்டான். சற்று நின்று குன்றைப் பார்த்தான். அதன் உச்சியில் வானளாவ வளர்ந்து நின்ற துறவியின் சிரம், நிலவைத் தொட்டது. கண்கள் விண்மீன்களிடையில் மின்னின...

''சுவாமி, அருள், அருள்'' என்று அவன் தொழுதான். தூரத்தில் உள்ள சிற்றூரை நோக்கி, அவன் கால்கள் விரைந்தன.

முதன்முதல் மனிதனாக்கப்பட்ட மனிதன் - புது மனிதன்... காட்டு மனிதன் நாட்டை நோக்கி நடந்தான்.

அவன் கால்கள், ஊர் எல்லையுள் புகுந்தன. அவன் எதிரே தெரிந்த விளம்பரப் பலகையில் 'குருவிப்பட்டி' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன... அவன் வியப்படைந்தான்!

ஊருக்குள் இளந்துறவியைக் கண்டு குறச்சிறுவர்கள் சிலர், தொங்கும் கோவணங்களுடன் துள்ளி ஓடிவந்தனர்.

'சாமி என்ன பார்க்கறீங்க..' உங்களைத்தான் பார்க்கிறேன்' சிறுவர்களை அடுத்துப் பெரியவர்கள் வந்தார்கள். புதிதாக உருவாக்கப்பட்டுள்ள அந்த ஊரைப்பற்றி எல்லா தகவல்களையும் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள்.

அரசாங்கம் கொண்டு வந்துள்ள ஐந்தாண்டு திட்டங்களின் ஒரு பகுதியாக, நரிக்குறவர்களுக்கு நல்வாழ்வு நல்க புதிய வீட்டு மனைகள், சுகாதார வசதிகள், உழவு மாடுகள், நஞ்சை புஞ்சை நிலங்கள், பிள்ளைகள் கல்வி கற்க பள்ளிக்கூடங்கள் அனைத்தும் வழங்கப்பட்டுள்ளதாகவும், புதிய நம்பிக்கையுடன் தாங்கள் புது வாழ்வை தொடங்கியுள்ளதாகவும், கூறி அவர்கள் பெருமைப் பட்டுக் கொண்டனர். ஆனால், ஒருகுறை... அது, பள்ளிக்கூடத்துக்கு வாத்தியார் இல்லாத குறைதான்'எனத் தெரிவித்தனர்.

'குறச் சிறுவர்கள் கல்வி பெறுவதை ஊர்ப்பெரியவர்கள் விரும்பவில்லை. அதனால் வாத்தியார்கள் வேலைக்கு வரத் தயங்குகிறார்கள்' என்றும் கூறினர்.

இளந்துறவி அண்ணாமலை, பள்ளிக்கூடத்தில் சிறுவர் களுக்குக் கல்வி போதிக்கும் வாத்தியார் பொறுப்பினைத் தான் ஏற்பதாகக் கூறினான். அவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

குருவிப்பட்டியில் அமைந்துள்ள பள்ளிக்குப் பெயர் 'தாமரைப்பள்ளி', வாசக சாலையின் பெயர் 'வானம்பாடி படிப்பகம்' அதனுள் நுழைகிறான் அண்ணாமலை.

அங்கே வைக்கப்பட்டிருந்த 'பாரதிதாசன் கவிதைகள்' நூலை எடுத்து 'புரட்சிக்கவி' என்ற பாடலைப் படித்தான். குறவர்கள் கைகட்டி நின்று கவனத்துடன் கேட்டனர். அண்ணாமலையின் குரல் கணீர் என்று ஒலித்தது.

''நீரோடை நிலங்கிழிக்க நெடுமரங்கள்
நிறைந்துபெருங் காடாக்கப் பாம்புக் கூட்டம்
போராடும் பாழ்நிலத்தை அந்த நாளில்
புதுக்கியவர் யார், அழகு நகருண் டாக்கி?''

அண்ணாமலை பாட்டை நிறுத்தினான்... குருவிப்பட்டிக் குறவர்கள் பூரித்தனர். தொடர்ந்து, அவர்களிடம் தன்னம்பிக்கை யூட்டும் வகையில் அறிவுரை புகன்றான்.

''நாம் தொழிலாளிகளாய் மாறவேண்டும்... அப்போதுதான் ஊர் நம்மை மதிக்கும். நிலம் உழுது பயிர்செய்ய வேண்டும். வீடு கட்டவேண்டும். கட்டிடம் எழுப்பவேண்டும். தொழில்களைக் கற்றுக்கொண்டு தொழில்களை வளர்க்க வேண்டும்.

'நாய்களைப் போல் எச்சில் சோற்றுக்குத் திரிந்த குறவர்கள்-தொழிலாளர்களாக மாறும்போதுதான், அவர்கள் மனிதர்கள் ஆவார்கள்''.

அவன்சொன்ன கருத்துக்களை வரவேற்ற குறவர்கள் 'ஆமாங்க, ஆமாங்க' என்று ஆமோதித்தனர்.

'தாமரைப் பள்ளி' கலகலப்பாய் காட்சி தருகிறது. குருவிப்பட்டியில் குதூகலம் கரைபுரண்டு ஓடுகிறது. எல்லாம், ஆசிரியர் கிடைத்துவிட்ட மகிழ்ச்சிதான்.

அண்ணாமலை வெறும் ஆசிரியராக மட்டும் பணியாற்றவில்லை. குறவர்கள் வாழ்க்கையைத் திருத்துவதிலும், அவர்களைக் குடிகளாய் மாற்றுவதிலும் சிரத்தை காட்டினான்.

ஒழுங்கு, ஒழுக்கம், சுகாதாரம் ஆகியவற்றை அவர்கட்குப் போதித்தான். முதன்முதலில் மனிதர்களாக்கப்பட்ட மனிதர்களுக்கு மனிதனின் பிறப்புரிமைகளை அவன் கற்றுக்கொடுத்தான்.

மேலூருக்கு குருவிப்பட்டியின் செய்தி எட்டியதும், அண்ணாமலையைக் காண்பதற்கு ஒரு தூதுக்குழு கிளம்பியது. அக்குழுவின் கோரிக்கைகளாவன...

'குருவிப்பட்டி ஆசிரியர் வேலையை ராஜினாமா செய்யவேண்டும். இளந்துறவியாகிய அண்ணாமலைக்கு ஓர் ஆசிரமம் ஏற்படுத்தித்தர மேலூர் சித்தமாயிருக்கிறது.'' கோரிக்கையை அண்ணாமலை ஏற்கவில்லை. மேலூர் கொதித்து எழுந்தது. என்றாலும் குருவிப்பட்டிக்குள் நுழையமுடியவில்லை.

அரசாங்கம் குருவிப்பட்டிக்குத் துணை! ஐந்தாண்டுத்திட்டம் இல்லை, மக்கள் திட்டம் குருவிக்காரர்களின் துணை. 'சரி, பார்க்கலாம்' என்று மேலூரார் கறுவினர்.

ஒருநாள் திருவண்ணாமலையில் தீபம் என்ற செய்தியை அண்ணாமலை கேள்விப்பட்டான். அன்று பள்ளிக்கு 'விடுமுறை' கொடுத்துவிட்டு, அண்ணாமலை காட்டுப்பாக்கம் செங்குன்றுக்குக் கிளம்பினான்.

துறவி அவனை கை நீட்டி அழைக்கிறார்... அவன் போகவேண்டும். இருட்டிவிட்டது. அண்ணாமலை ஓடினான். அதோ செங்குன்று தெரிகிறது. இன்னும் சிறிது தூரம்தான்... அவன் காட்டின் எல்லையை மிதித்தான். அப்போது-

''ஏய் நில்!'' என்ற குரல் அவனைப் பிடித்து உலுக்கியது. அவன் திரும்பினான். மேலூர்க்காரர்கள் தடிக்கம்புகளுடன் ஓடி வந்தனர். அந்தக் கூட்டத்துத் தலைவன் பேசினான்:

''உங்களெப் பார்த்தா பெரியவூட்டுப் புள்ளெமாதிரி தோணுது. மேலூர் மணியக்காரு மகளெ கல்யாணம் செய்துக்கினு, எங்களோடு வந்துடுங்க!''

அண்ணாமலை அவர்களை உற்றுநோக்கினான். 'மேலூர்க்காரர்களே! எனக்கு வேண்டுவது, பொன்னல்ல, பெண்ணல்ல, பொருள் அல்ல, என் கடன் பணி செய்துகிடப்பதே''.

பையனுக்குக் காலம் கிட்டிட்டுது'' என்றான் அந்த முரட்டுக் கும்பலின் தலைவன். 'மூடர்களே! என் வழியை விட்டு விலகுங்கள்'' என்று இரைந்தான் அண்ணாமலை.

அவ்வளவுதான், தடிக்கம்புகள் அண்ணாமலையின் மண்டையைப் பிளந்தன... ''ஐயோ! கீ...ஈச்...ஆவ்...ஓ...'' அண்ணாமலையின் உடல் உணர்வற்று மண்ணில் சாய்ந்தது.

'நிறுத்து' எங்கிருந்தோ ஒரு கணத்த அதட்டல்! முரடர்கள், தடிக்கம்புகளுடன் திரும்பினர். துறவியின் கண்களைப் பார்த்தனர். அருட்கண்கள் நெருப்பைக் கக்கின... சிறிது நேரத்திற்குள், முரடர்கள், கண்ணிழந்து, ஒருவரையொருவர் தடிகளால் தாக்கிக்கொண்டு ஓடினர். வழியில் சிலர் வீழ்ந்தனர். குருதி வெள்ளத்தில் கிடந்த அண்ணாமலை, நிம்மதியாய்த் தூங்கினான். அவன் உயிர்பிரிந்தது.

குன்றில் தீயைக் காணோம். பின்னர், துறவியைக் காணோம்.

அதோ, குருவிப்பட்டியில், அந்த தெய்வச்சிலைதான் ஆசிரியர் அண்ணாமலையினுடையது. சிறுவர்கள் பாடுகின்றனர்:

*''நீரோடை நிலங்கிழிக்க...''*

அவர்கள் ஏன் பாட்டை நிறுத்திவிட்டார்கள்.

ஏன், அப்படி அழுகின்றனர்.

மேலும் தொடராமலே கதையை முடித்துவிட்டார் கவிஞர் மேற்சொன்ன மூன்று கதைகளுமே, ஒடுக்கப்பட்ட மக்களின் உணர்வுகளைப் பிரதிபலிக்கின்றன அல்லவா?

கதைகளின் முடிவுகளும், படிப்போரின் நெஞ்சங்களைச் சுடாமல் சுடுகின்றன.

இந்த முடிவுகள்தான் தமிழ் ஒளியின் முத்திரைகள் எனக் கூறுவது சாலப்பொருந்தும்.

# 5

# நாடகங்கள்

தமிழ்ஒளியின் கதைகளைப் பற்றிக் கூறியது போன்றே, அவர் படைத்த நாடகங்கள் பற்றியும் இனிக் கூறுவோம்.

'சிற்பியின் கனவு' அவர் படைத்த முதல் மேடை நாடகம். அது அவருக்கு மகத்தான வெற்றியைத் தந்த நாடகம்.

அதேபோன்று, அவர் படைத்த 'சேரன் செங்குட்டுவன்' மேடை நாடகமும், 'சக்தி நாடக சபா'வின் வெற்றி நாடகமாகவே அமைந்தது.

இவ்விரு நாடகங்களும் வெற்றியடைந்த நிலையில், அப்பணியினை மேலும் தொடராமல் கைவிட்டதற்கு, கவிஞர் களமிறங்கிய அரசியலே காரணமானது.

அந்த 'அரசியல் களமே', கொள்கை ரீதியாக அவர் படைத்த 'தோழர் ஸ்டாலின்' வரலாற்று நாடகம், அரங்கேற்றம் காணாமல் தடைபட்டதற்கும் ஏதுவாயமைந்ததும் வியப்பளிக்கும் உண்மையே!

எது, எப்படியோ, மேற்சொன்ன மேடை நாடகங்கள் மூன்றும் எழுத்து வடிவமாக இப்போது நம்மிடமில்லை. அதனால், அந்நாடகக் கதையம்சம் குறித்து விவரிக்க இயலவில்லை.

1947இல் 'கவிஞர் விழா' என்ற தலைப்பில் ஏழு ஓரங்க நாடகங்களின் தொகுப்பாக சிறு நூலொன்று வெளிவந்துள்ளது. அவற்றில், 'கொலைகாரன்', 'மதுவிலக்கு', 'கபடநாடகம்' மூன்றும் சிறப்பானவை.

1948-49களில் அவர் படைத்த பத்து ஓரங்க நாடகங்கள் 'முன்னணி' ஏட்டில் வெளி வந்துள்ளன. அவற்றில், 'அணையாத தீபம்', 'அந்த நாள்', 'கயானாவிலிருந்து...' மூன்று படைப்புகளும் உணர்ச்சியூட்டும் எழுச்சிப் படைப்புகள் எனலாம்.

1956இல் 'உமா' ஏட்டில் அவர் படைத்த 'அணைந்த வேள்வி' ஓரங்க நாடகம், 'மணிமேகலை' காவியத்தில் சொல்லப்பட்ட 'ஆபுத்திரன்' வரலாற்றைப் பிரதிபலிக்கும் கதையம்சம் கொண்டது.

இதனை இலக்கிய நயத்துடன் 'நாடக' வடிவமாக்கியுள்ளார் கவிஞர். இங்கே, அந்நாடகத்தின் முக்கியப் பகுதிகளைக் காண்போம்.

**காட்சி - ஒன்று:**

ஒரு பகற்போதில்... யாகத்திற்கு பலியிடக் கட்டப்பட்ட பசு கதறுகிறது. 'அம்மா...ஆ...' என்ற பசுவின் குரல், உயிர்களை ஒரு கயிறுபோல் கட்டிப் பிணிக்கிறது. நீண்ட பெருமூச்சாக வெளிப்படுகிறது. அது பெருங்காற்றைப்போல் சீறிப் பாய்கிறது. கோயில் உச்சியில் ஆடும் இலை மணிகள் ஆயிரம் குரல்களைப் போல் ஒலிக்கின்றன. 'அம்மா...ஆ...''

இல்லங்கள் தோறும் கதவுகளைத் 'தடதட'வென்று ஆயிரம் கைகள் தட்டுகின்றன.

ஆபுத்திரன் : (திடுக்கிட்டு) யார், கதவைத் தட்டுவது?

குரல் : ''அம்மா, ஆ...''

ஆபுத்திரன் : கதவைத் தட்டுவது குழந்தையா?

குரல் : ''அம்மா...ஆ...''

ஆபுத்திரன் : 'அம்மா...'

குரல் : 'அம்மா...ஆ...''

ஆபுத்திரன் : என் அன்னை கதவைத் தட்டுகிறாள்...

வேற்றுக்குரல் : ஆம்.

(ஆபுத்திரன் கதவைத் திறந்து எட்டிப் பார்க்கிறான்)

குரல் : 'அம்மா...ஆ...'

ஆபுத்திரன் : கதறும் குரல் கேட்கிறது. கதவைத் தட்டியது யார்?

வேற்றுக்குரல் : உன் இதயத்தில் ஊறும் பாசம் அது - மனக்கதவைத் தட்டுகிறது.

(ஆபுத்திரன் காற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே ஓடுகிறான்)

### காட்சி - இரண்டு:

வேள்விச் சாலையில் பசு கட்டப்பட்டிருக்கிறது. முறுக்குக் கயிறு அப்பசுவின் கழுத்தை நெருக்குகிறது. அதன் விழிகளில் நீர் வடிகிறது.

ஆபுத்திரன் ஓடோடி வந்து பசுவைத் தழுவிக் கொண்டு கதறுகிறான். சத்தம் கேட்டு அந்தணர் ஓடி வருகிறார்.

அந்தணர் : யார் அது? ஆபுத்திரனா? 'ஆ'வைக் கட்டிக் கொண்டு ஏன் அழுகிறாய்? உனக்குப் பைத்தியமா?

ஆபுத்திரன் : (கேலியாக) அந்தணரே, உமக்குத்தான் பைத்தியம், வெறி, கொலை வெறி!

அந்தணர் : தூர்த்தா, என்னையா பழிக்கிறாய்? என்ன செய்கிறேன் பார்!

(அந்தணர் சீற்றத்துடன் பாய, ஆபுத்திரன் தப்பி ஓடுகிறான்)

### காட்சி - மூன்று:

வேள்விச் சாலையில் கட்டிக் கிடந்த பசுவைக் காணாமல் அந்தணர்கள் திகைக்கின்றனர்.

அந்தணர் : பசு எங்கே?

அந்தணர் குரு : ஆபுத்திரன் வேலைதான் அது! பகலில் என்னைப் பழித்தான். இரவில் பசுவைத் திருடினான். இது, அந்தணர் குலத்துக்கே அவமானம்!

அந்தணர் - 2 : சண்டாளன்

அந்தணர் - 3 : நீசன்...

(சிலர், ஆபுத்திரனைப் பசுவுடன் பற்றி இழுத்து வருகின்றனர்)

அந்தணர் - 4 : கையும் களவுமாய்ப் பிடிபட்டான் கள்வன்...

அந்தணர் - 1 : ''கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று''

அந்தணர் குரு : அற்புதம்...!

(பற்களை வெறு வெறு வெனக்கடித்து... ஒரு மிளாறு கொண்டு ஆபுத்திரனைத் தாக்குகிறார்...)

ஆபுத்திரன் : அந்தணரே, பொறும்!

அந்தணர் - 4 : தோலை உறியும்!

அந்தணர் - 1 : நகர்ந்து விடுங்கள் பசு முட்ட வருகிறது!

அந்தணர் குரு : ஹூம்... இந்தக் குலத் துரோகியை அடித்து நொறுக்காமலா நான் வருவேன்

('களீர்' என்ற ஒலியெழுப்பி மிலாறு சுழலுகிறது. ஆபுத்திரனின் உடலில் ரத்தங் கட்டுகிறது. மூர்க்கத்துடன் ஓடிவந்த பசு குருவின் வயிற்றிற் பாய்ந்து, கொம்புகளால் குத்துகிறது. குரு 'ஐயோ' என்று கதறி, மண்ணிற் சாய்கிறார். அவர் குடலைக் கிழித்துக் கொம்புகளில் ஏந்தி ஓடுகிறது பசு...)

ஆபுத்திரன் : அந்தணர்களே, பசுவா உங்களுக்குப் பகை? உங்கள் கையால் விதைக்கப்படாமல், இயற்கையன்னையின் மடியில் வளரும் பசும் புல்லை உண்டு, உலகு தோன்றிய நாள் முதல் உயிர்களுக்குப் பால் சுரந்து தரும் பசுவையா வதைப்பது? இதுவா, அருள்? இதுவா அறநெறி?

அந்தணர் - 1 : வேதநெறி அறியாதவன் வேள்வியின் எதிரி, தூர்த்தன், துஷ்டன். இவனை அந்தணர் குலம் தீண்டலாகாது!

ஆபுத்திரன் : இறந்த அந்தணன் பிணமானான். உங்கள் வேள்வி இவனை எழுப்புமா? இறந்தோரை எழுப்பமுடியாத நீர் பிறந்த உயிர்களைக் கொல்வதா? நீங்கள் கொன்ற அதே கொலை உங்கள் உயிரையும் தொடரும்!...

அந்தணர் -1 : இவன் நாத்தழும்பேறிய நாத்திகன்...!

அந்தணர் -2 : இவன் பிறப்பே இழிபிறப்பு. கூடா ஒழுக்கத்தாற் பிறந்த குலஹீனன், குழந்தையில் இவனுக்குப் பாலூட்டியது பசு. பசுவுக்கும் பரத்தைக்கும் பிறந்தவன் இவன்!

ஆபுத்திரன் : அந்தணர்களே, உங்கள் இருடிகளைப் பற்றி நான் அறிவேன். புராணங்களும் எனக்குத் தெரியும் கேளுங்கள். ஆண்மகன் அசலன்; மான் மகன் சிருங்கி; புலிமகன் விரிஞ்சி;

புரையோர் போற்றும் நரிமகன் அல்லனோ
கேச கம்பளன்?'' ''ஈங்கிவர் நுங்குலத்து
இருடி கணங்களென்று ஓங்குயர்
பெருஞ்சிறப்பு உரைத்தலும் உண்டால்,
ஆவொடு வந்த அழிகுலம் உண்டோ?''

(ஆபுத்திரன் வளர்ப்புத் தந்தை இளம்பூதி வருகிறார்...)

இளம்பூதி : ஆபுத்திரா, என்ன இது?

அந்தணர் -1 : அந்தணரே நம் குருவைக் கொன்றவன் இந்தக் கொலைஞன். இவன் குலத்துரோகி, இவனை உம் அகத்தில்' சேர்த்தீரோ ஏழு ஜென்மத்திலும் பிரம்மஹத்தி உம்மை விடாது...

ஆபுத்திரன் : தந்தையே, அவர் வினையால் அவர் இறந்தார். விதைத்ததை அறுத்தார். கொலை விதைத்தவன் கொலையை அறுப்பான். நெல் விதைத்தவன் நெல்லை அறுப்பது போல!

அந்தணர் : பார்த்தீரா, பிராமணரே? - வேதங்களின் வேள்வி கொலையாம்?

ஆபுத்திரன் : தந்தையே, பசுவைக் கொல்ல நினைத்து, அதை வருத்தினர் அந்தணர். நான் பசுவைமீட்டேன். என்னை ஒறுத்தார். பசுவுக்கும் பாசம் உண்டல்லவா? அது பாய்ந்து அந்தணரின் குடலைக் கிழித்தது. அவர் விழுந்தார். வேள்வி அணைந்தது. உயிர்களின் அறம் வென்றது!

('சிவ சிவ' என்ற அந்தணர்கள் செவியைப் பொத்துகின்றனர்)

வளர்ப்புத் தந்தை : ஆபுத்திரா, நான் உன்னை வளர்த்தது அறிவற்ற செயல்தான்.

ஆபுத்திரன் : தந்தையே நான் சொல்லவில்லை.

வளர்ப்புத் தந்தை : இனி நான் உனக்குத் தந்தையல்ல, என் அகத்தில் கால் வைக்காதே!

ஆபுத்திரன் : தந்தையே, உலகம் அகண்டாகாரமானது! உயிர் காக்கவே அது பிறந்தது. சிறிய இல்லத்தில் உங்களுக்கு மகனாக இருந்தேன். இனி பெரிய உலகில் உயிர்களுக்கு மகனாக இருந்து சேவை செய்வேன்.

வளர்ப்புத் தந்தை : ஆபுத்திரா, நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன். நீ போய் வா...!

ஆபுத்திரன் : (குரல் தழுதழுக்க) தந்தையே, இதோ செல்கிறேன். உங்கள் நன்றியை ஒருநாளும் மறக்க மாட்டேன். உயிர்க்குலம் அழைக்கிறது. நான் செல்கிறேன்.

(வளர்ப்புத் தந்தையை வணங்கிப் பிரிகிறான் ஆபுத்திரன்)

அந்தணர் - 1 : ஐயோ, பைத்தியரக்கார பிராமணரே! நீர், எதற்காக அழ வேண்டும்? நம் குருவின் மறைவுக்கு அழாத நீர், அந்தக் குடிகேடனுக்காக ஏன் அழுகிறீர்?

வளர்ப்புத் தந்தை : பாசம் என்னவென்று உமக்குத் தெரியாது. அவன் என் மகன். பதினெட்டு ஆண்டுகள் வளர்த்தேன். என் கையால் வளர்ந்தான். அவன் ஒரு ஞானி; அந்தணர் குலத்தில் அவனைப்போல் இனி பிறக்கப் போவதில்லை. ஆபுத்திரா! அந்தோ, ஆபுத்திரா...!

(ஆபுத்திரனின் வளர்ப்புத் தந்தை இளம்பூதி விம்மி அழுகிறார். பின்னணியில் 'அம்மா...ஆ' என்ற குரல் ஒலிக்கிறது. நிகழ்ச்சி முற்றுப்பெறுகிறது)

# 6

# ஆய்வு நூல்கள்

தமிழ்ஒளி படைத்த ஆய்வு நூல்கள் மூன்று. அவை 'சிலப்பதிகாரம், காவியமா? நாடகமா?', 'திருக்குறளும் கடவுளும்', 'தமிழர்சமுதாயம்' ஆகியன. அவற்றுள் 'சிலப்பதிகாரம், காவியமா? நாடகமா?' நூலை முதலில் காண்போம்.

**'சிலப்பதிகாரம், காவியமா? நாடகமா?'**

இந்நூல், சிலப்பதிகார நூல் 'வடிவம்' குறித்து எழுந்த ஆய்வாகும்.

இந்நூலுக்குள் புகுமுன், 'அரங்கு வாயிலில்' கவிஞர் கூறியுள்ளதை நாம் கவனத்திற் கொள்வோம்.

''சிலப்பதிகாரம் காவியமா, நாடகமா?'' என்னும் இந்நூலில், அது காவியமுமன்று - நாடகமுமன்று, அஃதோர் 'இசை நாடகமே' என்பதனைத் தக்க சான்றுகளுடன் நிறுவியுள்ளேன்.''

இம்முடிவினை எட்டுதற்கு, கவிஞர் மேற்கொண்ட முயற்சியும் உழைப்பும் நம்மை ஈர்த்து நூலினைத் தொடர்ந்து படிக்கத் தூண்டுகிறது.

ஆய்வு நெறிப்படி 'சிலம்பின்' பெயர்க்காரணம், கதைச் சுருக்கம் கூறி, 'நெஞ்சை அள்ளும் சிலம்பின்' உன்னதத்தை உணர்த்துகிறார்.

இந்த விவரங்கள் தமிழ் நெஞ்சங்கள் அறிந்தவையே. அதனால் விரித்துரைக்க விரும்பவில்லை.

'சிலப்பதிகாரம் ஒரு காவியமா?' என்ற வினாவெழுப்பி, அது பொருள் தொடர்நிலைச் செய்யுள், 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்', 'காப்பியம்', 'நாடகக் காப்பியம்' எனும் பல்வேறு சொற்களும், 'சிலம்பைக்' குறிக்கும் ஒருபொருட் பல சொற்களாகவே கருதப்படுகின்றன. '' - இதுவே ஆய்வுக்கு அடிப்படை.

'சிலம்பு ஒரு காவியமா? அதாவது, சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் போன்று அது ஒரு காவியமா? நாடகக் காப்பியம், அல்லது 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' எனும் சொற்கள்,

காவியத்தைக் குறிக்கும் சொற்களா? என்பனவற்றை யாரும் சிந்திக்கவில்லை.

'சிலப்பதிகாரம், ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று' என்று படித்துப் பழகிய பழைய உணர்ச்சி, ஆராய்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. உண்மையில் 'சிந்தாமணி' போன்றோ, கம்பராமாயணம் போன்றோ, 'சிலம்பு ஒரு காவியமல்ல.

படிப்பதற்காக எழுதப்படுவதே காவியம், அதற்கும் 'அரங்கிற்கும்' தொடர்பில்லை.

''சிலம்பின் கண்ணுள்ள முப்பது காதைகளில், நிலை மண்டிலப் பாக்களால் இயன்ற காதைகள் இருபது. அவை குணச் சித்திரங்களைத் தோற்றுவித்தல் இன்றிக் கதையைப் புலப்படுத்திச் செல்கின்றன. மீதமுள்ள பத்து காதைகளில், காவியத்திற்குப் பொருந்தாத வரி, குரவை முதலியனவும், அவற்றுடன் வரும் கூத்துக்களும் காட்சி தருகின்றன. அவை பண் இன்பமும், பாணி இன்பமும் தந்து நாடகச் சுவையூட்டுகின்றன.''

''பாடப்பெறும் கலிப்பாக்கள், பாத்திரத்தின் நாடகத் தன்மையைத் தோற்றுவிக்கின்றன. அதாவது, பாடுவோன் வாயிலாகப் பாத்திரத்தின் உணர்ச்சி அரங்கில் உயிர்த்தெழக் காண்கிறோம்.''

''பாத்திரங்களுக்கு வேடமும் அவை நடிக்கும் அரங்கும் சிலப்பதிகாரத்திற் காணப்படுவதாலும், குணச்சித்திரங்களைத் தரும் சந்தங்களற்ற காதைகள், கதையைக் கூறிச் செல்வதாலும் அச்சிலம்பு ஏதோ ஒரு புதுமையை உள்ளடக்கிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம்.''

''அது, மணிமேகலையைப் போன்று பொருட்டொடர் நிலைச் செய்யுளுமன்று. கம்பராமாயணம் போற் காவியமுமன்று. ஆனால், கதை கூறுந் தன்மையும், நாடகப் பண்பும், அரங்கும் பெற்ற ஒரு வடிவம் என்று தெரிந்து கொள்ளுகிறோம்.''

''சிலப்பதிகாரத்தில் அரங்கம் உண்டு. ஆனால், கதை பாடப்பெறுகிறது. பாத்திரங்களின் உரையாடல்களும் கதை பாடுவோனால் விவரிக்கப்படுகின்றன. சில இடங்களிற் பாத்திரங்களும் தோன்றுகின்றன. ஆனால், அவை கதையை நடாத்திச் செல்வதில்லை. கதை கூறும் சூத்திரதாரியே கதையை நடாத்திச் செல்கிறான்.''

''இசையும் கூத்தும் இன்றி, நாடகங்கள் இயலும், ஆனால், சிலப்பதிகாரம் இசையும் கூத்தும் இன்றி இயல்வதில்லை''-இவற்றால்-

''நாடகப் பண்பு பெற்றிருந்தும், நாடகத்திற்கும் அப்பாற்பட்ட ஒரு கலை வடிவைச் சிலப்பதிகாரம் கொண்டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்கிறோம்.''

'சிலப்பதிகார நூலின் இறுதியில் வரும் 'நூற்கட்டுரை'யில், சிலப்பதிகாரத்தின் வடிவம் இன்னதென்பதை ஆசிரியர் இளங்கோவடிகளே குறிப்புணர்த்தியுள்ளதையும் நம் கவனத்திற்குக் கொண்டு வருகிறார் கவிஞர்.

''அறம், பொருள், இன்பம் ஆகிய மூவகை வாய்மைகளையும், அகமும் புறமும் சார்ந்த அழகுமிக்க பாடல்களையும் கொண்டதும்-

'யாழும், பண்ணும், தாளமும், அரங்கும், விலக்குறுப்பும், கூத்தும் என்ற அனைத்தையும் ஒருசேரத் தழுவியதும்,-

அவற்றுடன் இசைவுபெறக் கிடந்த வரியும், குரவையும், சேதமும் என்னும் இவற்றை உட்கொண்டதும் -

கண்ணாடியிலே பெரிய மலையினைக் காட்டுவார் போலக் கருத்துக்களைத் தோற்றுவித்து, 'மணிமேகலை'யென்கிற கதையுடன் சென்று முற்றுப்பெறக்கூடியதும் ஆகிய சிலப்பதிகாரம் முற்றும்'' என்பதே அந்நூற்கட்டுரையின் கருத்து.

'சிலப்பதிகாரக் கதையைக் காணும் கண்ணாக இருப்பது இந்நூற் கட்டுரைதான்.''

இதனை அடிப்படையாகக் கொண்டு, சிலப்பதிகாரத்தில் இயன்றுள்ள முப்பது காதைகளையும் நிரல்பட வைத்து, அவற்றை அரங்கின் நிகழ்வாக - ஆசிரியர் இளங்கோவடிகளே பாடுவோனாக இருந்து 'சிலம்பை' பாடுவதாக உணர்த்துகிறார் கவிஞர்.

''அரங்கிலே ஆடலும் பாடலும் நிகழக் கூத்தும் கொள்கையும் விளங்கக் குயிலுவக் கருவிகள் சேரப் பாடப்பெறும் கதைக்குப் பெயரே 'இசை நாடகம்'. அதனை ஆங்கிலத்தில் 'ஆப்பெரா' (Opera) என்றழைப்பர்.

''இசை நாடகப் பிறப்பிடங்களாகக் கிரேக்க ரோம நாடுகளையே சரித்திரம் குறிப்பிடுகிறது.

ஆனால், தமிழகத்திற்கும் கிரேக்க நாட்டிற்கும் நீண்ட கலை, பண்பாட்டுத் தொடர்புண்டு என்பதை வரலாறு தெரிவிக்கின்றது.

''கிரேக்கத்தையே சேர மன்னர்கள் ஆண்டதாகவும் சிலப்பதிகாரம் பாடுகிறது. அடல் வாள் யவனர், தமிழ் மன்னர் தம் அரண்மனைகளிலே காவலாளராக இருந்து வந்துள்ளதனை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.''

எனவே, கிரேக்க நாட்டிற்கும் நமக்கும் பண்டைக்கால கலைத் தொடர்பு இருந்திருத்தல் இயற்கையே ஆகும். மேலும், கிரேக்க நாட்டிலே, மார்ச்சு, ஏப்பிரல் மாதங்களில் 'டயோனிசியா' என்ற தேவதைக்கு விழா நிகழ்வதும் அவ்விழாக்காலத்தில் எங்கும் நாடகங்கள் நடைபெறுவதும் வழக்கமாக இருந்து வந்துள்ளது:.

அதேபோன்று, சோழநாட்டின் பூம்புகாரில், பங்குனி, சித்திரை மாதங்களில் 'இந்திர விழா' நடைபெறுவதும், அவ்விழாக் காலத்தில் எங்கும் நாடகங்கள் நடைபெறுவதும் வழக்கமாகவே இருந்துள்ளது.

இவ்விரண்டினையும் ஒப்பு நோக்கும்போது, 'இசை நாடகக் கலை' தமிழ் நாட்டினின்றும் கிரேக்கம் சென்றிருக்க வாய்ப்புக்கள் உண்டென்றே கவிஞர் கருதுகின்றார்.

முடிவில் - 'தமிழகத்திற் பண்டு பெருகியிருந்த இசை நாடகங்களின் கடைசிச் சுடரே சிலப்பதிகாரம். அது, கடைசிச் சுடர் ஆகையினாலேதான், இளங்கோவடிகள் இசை நாடக இலக்கணத்தையும் சிலம்பினுள் பொதித்து வைத்தார். இன்றேல், தடந்தவறிய தமிழர், இசை நாடகக் கலையை உணர்வது எவ்வாறு?''

''சோழப் பேரரசு வீழ்ந்ததைத் தொடர்ந்து இசை நாடகம், பழுமரம் அற்ற பறவையாயிற்று. குயிலுவக் கருவியாளரோ அற்ற குளத்திற் கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போல ஒட்டியுறைந்து மறைந்தனர்.''

''அந்நியர் வருகையிடையே படரும்புழுதி தேசிகத்தை மறைத்தல் இயற்கைதானே?''

தமிழில் மறுமலர்ச்சி என்று இன்று பேசப்படுவது பொய்யுரை யன்று, பொருளுரையென்று உலகிற்கு நாம் காட்டவேண்டுமாயின் இழந்த கலை வடிவங்களை நாம் மீட்கவேண்டும்.''

கவிஞர் மேற்கொண்ட ஆய்வின் பயனாக சிலப்பதிகார நூல் வடிவம், ஓர் 'இசை நாடகம்' என்பதை ஐயத்திற்கிடமின்றித் தெளிவுபடத் தெரிந்து கொள்ளுகிறோம்.

இந்நூலினை முழுமையாகப் படித்த புலவர் சாமி-சிதம்பரனார் அவர்கள், 'இது ஒரு துணிகரமான முயற்சியென்று பாராட்டுரைத் துள்ளார்.

மறைந்த இசை நாடக வடிவத்தை மீட்டுக் கொணரும் முயற்சியாக கவிஞர் படைத்த 'விதியோ, வீணையோ?' இசை நாடகம் அமைந்துள்ளதும் இங்கு கருதற்பாலது.

**திருக்குறளும் கடவுளும்**

உலகப் பொதுமறையாம் 'திருக்குறள்' நூலுக்கு உரை வகுத்த முன்னோர் பதின்மர்.

அவர்களுள் பரிமேலழகர் வகுத்த உரையே நனி சிறந்ததெனப் போற்றப்பெறுகின்றது.

சைவாகமம் தோன்றுவதற்கு முன் 'குறள்' தோன்றியது.

சைவாகமம் தோன்றுவதற்குப் பின் தோன்றியவர் பரிமேலழகர்.

மிகவும் பிற்காலத்தவரான பரிமேலழகர், தாம் சார்ந்து நின்ற சைவாகம கொள்கைகளுக்கேற்பவே, 'திருக்குறளின்' பாயிரத்துக்கு உரை வகுத்துள்ளதாக தமிழ்ஒளி, குற்றம் காணுகிறார்.

முதற்குறளில் வரும் 'ஆதிபகவன்' என்ற சொல்லுக்குப் பொருள்கூறுமிடத்து, 'சிவன், பிரம்மா, விஷ்ணு' ஆகிய மூவரையும் ஒன்றுபடுத்தி, மூவராகிய முதற்கடவுள் என்று பொருள் கூறி, வாசகர்களை வழிமாற்றி அழைத்துச் சென்று விடுவதாகவும் கவிஞர் கருதுகிறார்.

'ஆதிபகவன்' என்னும் சொல் அருக சமய நூற்களில் பயின்று வருவதைத் தமிழறிஞர்கள் அறிவர். அஃது அருகசமய அறிவர்களின் முனைவராகிய 'இடபதேவரையே' குறித்துவரும்.

இவ்வுண்மையை மறைத்து, 'ஆதிபகவன்' என்பதனை இருபெயரொட்டுப் பண்புத் தொகை ஆக்குகிறார் பரிமேலழகர்.

''இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாக்குவதன் மூலம், 'ஆதிபகவன்' என்ற சொல்லை கடவுட்கும் பொருத்தலாம். எவ்வாறெனில், 'ஆதி' எனினும் கடவுள். (ஆதியாய் நிற்பது) 'பகவன்' எனினும் கடவுள். இவ்விரு பெயர்களும் ஒட்டி 'ஆதிபகவன்' ஆயிற்றென்பதே பரிமேலழகர் கொள்கை.''

''ஒரு பண்பைக் கொண்ட இருசொற்களே தம்முள் ஒட்டி இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாகும்.''

''இலக்கண நூற்களின் உரையாசிரியர்களில் ஒருவரேனும், 'ஆதிபகவனை' இருபெயரொட்டுப் பண்புத் தொகைக்கு உதாரணம் காட்டிலர். பரிமேலழகர் இவ்வாறு தமிழ் நூலாரோடு மாறுபடுதல் தெளிவு.''

தமிழ் நூன் முடிபுக்கும், தருக்க வியலுக்கும் முரண்படும் உரை, உரையன்று.''

'ஆதி' என்பது முதன்மையையும், 'பகவன்' என்பது அறிவரையும் குறித்து நிற்க, முதல் அறிவர் என்ற பொருளில் 'ஆதிபகவன்' என 'இடபதேவரை' தமிழ் நூல்கள் அழைக்கின்றன.

'ஆதி பகவன் முதற்றே' என்பது, (உலகு) ஆதிபகவனை முதலாகவுடையது என்று விரியும். அது வேற்றுமைத் தொகை. 'முதற்றே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது.'

'உலகிற்கு முதன்மை ஆதிபகவனே' என்பது தேற்றம்.

'ஆதிபகவன்' எனும் இடபதேவர், இயற்கையை ஆராய்ந்து, மக்களின் வாழ்க்கையை வகுத்தார்.

'அவர் மண்ணில் உழுது பயிரிடுதலையும், பண்ட மாற்றறிவையும், கல்வியையும் கண்டு மக்களுக்கு வழங்கி வாழ்க்கையை பொருளுடைய தாக்கினார்.'

''உலகிற்குத் தீ, வான், நீர், காற்று ஆகியன முதலவேனும், அவை மக்களின் வாழ்க்கையை வகுக்கவில்லையாதலால், அவ்வறிவை வழங்கிய 'இடபதேவரே' உலகுக்கு முதல் ஆயினார் ஆதலின், 'ஆதிபகவன்' முற்றே உலகு' எனப்பட்டது.''

'உழவை முதலிற் கண்டவர் இடபதேவர் என்பது கருதியே அவருக்குக் 'காளைச் சின்னம்' தரப்பட்டது. இடபதேவர் என்ற சிறப்புப் பெயரும் அதனாலேயே அமைந்தது.''

''அருக சமயத்தவர்க்கு இருபத்து நான்கு அறிவர்கள் உளர். அவருளுள் முதல்வர் இடபதேவர். உலக வாழ்க்கையை வகுத்தவருள்ளும் அவரே முதல்வர்.''

''இவ்விரு பொருளும் பொருந்தவே அவரை 'ஆதிபகவன்' என்றழைப்பர். இது நூன் மரபும் வழக்காறும் ஆகும்.''

முதற்குறளுக்குப் பின்வரும் ஒன்பது குறட்பாக்களும், அவ்விடபதேவரையே வாழ்த்துவனவாகும்.

''அவர் - இறைவன், எண்குணத்தான், வாலறிவன், அறவாழி அந்தணன், பொறிவாயில் ஐந்தவித்தான் என்ற அருக சமயத்தவரால் போற்றப்படுவார். அவ்வழக்காற்றிற் கியைபவே வள்ளுவரும் ஆதிபகவனை வாழ்த்தினார்.''

இவ்வுண்மையைக் கருத்தில் கொள்ளாமல், ''காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின் ஆதிபகவன் முதற்றே என உலகின்மேல் வைத்துக் கூறினார்'' என்று பரிமேலழகர் குழப்புகிறார்.

அருவமான கடவுட்குப் பொறிகளின்மையாலே வாயில்கள் இலவாதலானும், வாயில்களின்மையாலே அவற்றை அவித்த லென்பது பொருந்தாமையானும், குணங்களற்ற கடவுட்கு என் குணங்களைக் கற்பித்தல் ஒவ்வாமையானும், அவ்வெண் குணங்களைப் பெறுதல் அருகசமய அறிவர்க்கு முயற்சி ஆதலானும், ஆதிபகவன் என்பவர் காணப்படாத கடவுளர் அல்லர் - என்பது தேற்றம்.''

''கடையிலா ஞானம், கடையிலா காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம் என்பவற்றோடு, நாமமின்மை, மயக்க மின்மை, கோத்திரமின்மை, ஆயுளின்மை என்பனவற்றைச் சேர்க்க, அவை எண்குணங்களாகும். அவ்வெண்குணங்களை அடைதல் மனித ஆற்றலுக்குட்பட்டதே என அருகசமயம் அறைகூவும்.''

எனவே இடபதேவர்க்கன்றி அவ்வெண்குணங்கள் கடவுட்குப் பொருந்தாமையாலே, அப்பெயர் இருபெயரொட்டுப் பண்புத்தொகை ஆகாது. காரண இடுகுறிப் பெயராய் நின்றது.''

'முள்ளி என்பது முள்ளையுடைய எல்லாச் செடிகட்கும் பொருந்துமேனும், அஃது ஒருவகை முட்செடியையே குறித்து நிற்பது போன்று, 'ஆதிபகவன்' என்னும் பெயரைக் காணப்படாத கடவுட்கும், பொருத்தலாமேனும், அஃது காரணவிடுகுறியாய் நின்று, முதல் அறிவர் எனும் பொருள்கொண்டு, இடபதேவரையே குறித்தது.''

'ஆதிபகவன் என்பவர் உலகிற்குத் தலைமையேற்றார். ஆனால், அவர் உலகிற்கு ஆதியாய் நின்றவர் அல்லர், எனவே, தலைமை பற்றி வரும் எடுத்துக்காட்டுவமையும் ஆதிபகவர்க்குப் பொருந்துவதன்றி, காணப்படாத கடவுட்குப் பொருந்தாமை காண்க.

''வழிபடு கடவுளையாதல், எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல் நூலாசிரியன் இயற்கையேனும், ஈண்டு வள்ளுவர் வழிபடு கடவுளையே வாழ்த்தினார்.''

''அருக சமயத்தவர்க்கு வழிபடு கடவுளன்றி ஏற்புடைக் கடவுள் இல்லாமை அறிக. ஏற்புடைக் கடவுளை வாழ்த்துதல் அருக சமயத்தாற் கடியப்படுவ தொன்றாகும்.''

'அருக சமயத்தவரின் வழிபடு கடவுள் 'ஆதிபகவன்' ஆதலின், ஈண்டு வள்ளுவரின் வாழ்த்தும் ஆதிபகவன் வாழ்த்தாகவே அமைந்தது.'

இதனை அடிப்படையாகக் கொண்டே அடுத்துவரும் பாயிரப் பாக்களும் அமைந்துள்ளதாக, வாசகர் ஏற்கும் வண்ணம் விளக்கிக் கூறித் தமது கொள்கையை உறுதிப்படுத்துகிறார் கவிஞர்.

'திருக்குறளும் கடவுளும்' என்ற தலைப்பினை ஏற்றுள்ள இந்நூல், திருவள்ளுவர் அருகசமயத்தவர் என்றும், அவர் வாழ்த்தும் கடவுள், அருகசமயத்தின் முதல்வர் 'இடபதேவரே' என்றும் அசைக்க முடியாத சான்றுகளுடன் எடுத்துரைக்கிறது.

நூலின்கண் வரலாற்றுண்மையும், இலக்கியச் சான்றும், இலக்கணத் தெளிவும் தமிழ்ஒளியின் புலமைக்குச் சான்றாக வெளிப்பட்டுள்ளதும் பெருமை கொள்ளத்தக்கது.

**தமிழர் சமுதாயம்**

மொழியியல் அறிஞர் டாக்டர் கால்டுவெல் இயற்றிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண' நூல், தமிழறிஞர் புலவர் கோவிந்தன் அவர்களால் தமிழாக்கம் செய்யப்பெற்று வெளிவந்தது.

அந்நூலை ஆர்வமுடன் கற்ற தமிழ்ஒளி மிகுந்த மனக்கிளர்ச்சியுற்றார். அதன் விளைவாக எழுந்ததே 'தமிழர் சமுதாயம்' எனும் இந்நூல்.

பத்தொன்பது கட்டுரைகளைக் கொண்ட இந்நூலின் முற்பகுதி முழுவதும் மொழியியல் தொடர்பான கருத்துக்களை வெளிப்படுத்துகிறது.

இரண்டாம் பகுதியில், தமிழர் சமுதாயம் குறித்த தமது எண்ணங்களை விஞ்ஞான பூர்வ ஆதாரங்களுடன் விளக்கிக் கூறுகிறார் கவிஞர்.

நூல் அறிமுக நோக்கில் சில பகுதிகளை மட்டும் இங்கே எடுத்து வைக்கிறேன்.

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மனித சமூகத்தின் சரித்திரத்தை மூன்று கட்டங்களாகப் பிரிக்கிறார்கள்.

1. காட்டுநிலை (Savagery)
2. காட்டுமிராண்டி நிலை (Barbarism)
3. நாகரிக நிலை (Civilization)

எனும் மூன்று நிலைகளே அவை.

''பண்டைய மனித குலத்தைப் பற்றிய வளர்ச்சிகளைக் கணக்கிட்டுக்கண்டவர் 'மார்கன்' என்ற அறிஞர் ஆவார்.''

''மார்கன் எழுதிய கருத்துக்களின் அடிப்படையில் ஏங்கல்ஸ் என்பவர் 'குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்' என்ற நூலை யாத்தார். அந்நூல், மேற்கண்ட மூன்று நிலைகளையும் படிப்படியாய் அடைந்த ஆதி மனிதர்கள், குடும்பங்களாக வளர்ந்து, சமுதாய நிலையை அடைந்து, அரசமைத்த விவரங்களை விளக்கிக் கூறியது.''

''விஞ்ஞான முறையில் அமைந்த அவ்விளக்கம், எல்லாச் சமூகங்களையும், சமூக வளர்ச்சிகளையும் அறியும் அறிவை நமக்கு வழங்குகிறது.''

''அத்தகைய விஞ்ஞானக் கண்ணோட்டத்தின் அடிப்படையில், தொன்மைக் காலத்தமிழர் சமுதாயத்தை ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.''

''ஆரியர் இந்தியாவில் நுழைந்து, வட இந்தியக் குடிகளை வென்று, அரசு கண்டு, பின்னர் இனக்கலப்பிற்கு ஆளாகித் தெற்கே தமிழகம் போந்து, முடிமன்னர்களை அணுகித் தமிழ்ச் சமுதாயத்தலைமைபெற முயன்றபோது, புராணங்கள் புகுந்தன. கட்டுக்கதைகள் கிளம்பின. நிலத்தலைவர்கள் ஆற்றிய பண்டையப் போர்களின் சரித்திரத்தன்மை ஒதுங்கிக் கற்பனைத் தன்மை மேலோங்கியது.

''ஆரிய மன்னரால் தூண்டப்பெற்ற குழுக்களும், பாழ் செய்யும் உட்பகையும், குறுமன்னர்களும் தமிழ்நிலத்தை அச்சுறுத்தி, அதன் பெருமையைக் குலைக்க முற்பட்டனர்.

''தமிழ்மொழி, பெருத்த எதிர்ப்பையேற்று நிற்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. எனினும் ஆரிய மரபு தமிழ் நிலத்தலைவர்களைக் கடவுள்களாய் ஏற்றுக் கொண்டதன் காரணமாய்த் தமிழ் நிலத்தில் உறுதிபெறத் தொடங்கியது.''

''விஞ்ஞான அறிவை வளர்த்துக் கொள்ளாத 'நிலப்பிரபுத்துவச் சமுதாயம்' கற்பனைகளையும், புராணங்களையும் ஏற்றுக் கொண்டதன் மூலம், தன் பண்டைய மரபான பொருள் முதன்மைக் கருத்தை வளர்க்கத் தவறிவிட்டது.

''ஆரியர் தமிழ்ச் சமுதாயத்தின் சாரமாகிய 'நிலப்பிரபுத்துவத் தன்மை'யை முழுதும் உறிஞ்சிக் குடித்தபின், தம் கற்பனைகளைப் - பொருண்முதன்மைக் கருத்தினின்றும் மாறுபட்ட எண்ண முதற்கருத்துக்களைப் பெரிதும் வளர்த்து, வீர வணக்கத்தை முழுக்க முழுக்கக் கடவுள் வணக்கமாய் மாற்றினார். அதே 'கடவுள் தன்மை'யையும் பின்னால் மிக மிகக் கொச்சைப்படுத்தினர்.''

''இவ்வாறு கொச்சைப் படுத்தியதில், ஆரியச் சமூகம், 'நிலக்குடிகளின் சொந்தத் தலைவர்கள் மேல் கொண்டிருந்த வெறுப்பு வெளிப்பட்டதெனினும், ஆரியச் சமூகத்தின் முழு நோக்கம், வீர வணக்கத்தைக் கடவுள் வணக்கமாய் மாற்றுவதும், பொருண்முதற் கருத்தாய் மாற்றுவதுமே ஆகும்.''

**''தமிழ்ச் சமுதாயத்தின் பொருண் முதன்மைக் கருத்து''**

''சங்க இலக்கியங்கள்'' எனப்படும் தொகுப்பிற் காணும் பாடல்களிற் சில, மிக முற்பட்ட சமூக அமைப்பையும், சில, பிற்பட்ட சமூக அமைப்பையும் படம் பிடிப்பனவாய் உள்ளன.''

''முற்பட்ட சமூக அமைப்பில் தோன்றிய பாடல்களில் 'உண்மை நோக்கும் பண்பு' பளிச்சிடுகின்றது.

''எண்ண முதற் கருத்துக்கள், ஆரிய மரபு பெற்றவை.' அக்கருத்துக்கள், தமிழ்ச் சமூகத்தில் இடம்பெறுவதற்குமுன்- அதாவது செவிவழிச் செய்தியிலும் பிறவற்றிலும், எண்ணமுதற் கருத்துக்கள் இடம்பெறுவதற்குமுன் - தமிழ்ச் சமூகம் பொருண் முதன்மைக் கருத்தினின்றும் தன் பார்வையை வேறு பக்கம் செலுத்தவில்லை யென்று தெரிகிறது.''

**தொல்காப்பியம்**

'நிலம், தீ, நீர், வளி, விசும் போடைந்தும் கலந்த மயக்கம் உலகம்'' என்று கூறும் தொல்காப்பியம், ஐம்பூதங்களின் சேர்க்கையே உலகம் என்று அறுதியிடுகின்றது.''

'இவ்வாறு, பொருண்முதன்மைக் கருத்தை ஏற்றுக்கொண்டதன் மூலம், தொல்காப்பியம் 'முழுமுதற்கடவுளை' மறுப்பதனைக் காணலாம்.

'ஆதலின் அத்தொல்காப்பியம், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய திணைத் தலைவர்களை - அதாவது சேயோன் (முருகன்), மாயோன் (விஷ்ணு), இந்திரன், வருணன் ஆகிய தலைவர்களை - கடவுளர்களாகக் கொள்ளவில்லை. எவ்விடத்தும் அவர்கள் கடவுள்களாகக் காட்டப் பெறவும் இல்லை. ஆனால், பிற்பட்ட காலத்தே, அவர்கள் கடவுளர்களாய் வணங்கப் பெற்றனர். அதற்கும் பிற்பட்ட காலத்தே, சமயங்கள் தோன்றின. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாய் காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திர விழா நிகழ்ந்து வந்ததனை நாம் அறிவோம்.'

'ஆன்மீக வழியில், கால் எடுத்து வைக்கத் தொடங்கிய தமிழ்ச் சமூகத்தில், ஆரியர் தம் கற்பனைகள் புகுந்த பின், எண்ணை முதற் கொள்கை தனக்கென்று சீர் அமைப்பை ஏற்படுத்திக் கொண்டது. அந்த அமைப்புக்குப் பெயர்தான் சமயம் (Religion).

''சமயம் - சமுதாயம் ஆகிய இரு துறைகளிலும் ஆரியம் இடம்பெற்ற போதிலும், மொழித்துறையில் தன் முனைப்பை மேலோங்க விடாமற் பார்த்துக் கொண்டனர் புலவர்.''

''தொல்காப்பியர், வடமொழி வராது தடுக்க வேலிகள் அமைத்தார். எனினும், பரந்த தமிழ்நிலம் ஆரியர்தம் கலப்புக் கொள்கையால் சிதைந்தது! ஐயாயிரம் ஆண்டுகட்குப் பின் நின்று திரும்பிப்பார்த்தால் தமிழ்ச் சமூகத்தின் எலும்புக்கூடுகளை ஆரியப்பேய், தன் கையில் ஏந்தி நடந்து செல்வதைக் காண முடிந்தது.

இதுவரை எடுத்துக் கூறப்பட்ட கருத்துக்கள், நூலின் இரண்டாம் பகுதியில் உள்ள மூன்று தலைப்புகளில் உள்ளடங்கிய கருத்துக்களின் சுருக்கமே.

நூல் முழுவதையும் கற்றால், தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மையும், அதன் சீர்மையும், பிற்காலச் சீரழிவுகளால் நேர்ந்துவிட்ட பின்னடைவுகளும் தெற்றென விளங்கும்.

# முடிவுரை

**படைப்பின் சிறப்புகள்**

1) கவிஞரின் முதல் படைப்பாம் 'கவிஞனின் காதல்' நூலில், வறுமையுற்ற முதியோர்க்கும், சிறார்களுக்கும் உணவளித்து கல்வி புகட்டுவதாகக் கூறப்பட்டுள்ளது. 1944-இல் எழுந்துள்ள கவிதை இலக்கியங்கள் எதிலும் இக்கருத்துச் சொல்லப்படவில்லை.

2) கவிஞர் படைத்துள்ள 'நிலைபெற்ற சிலை' 'வீராயி', 'மேதின ரோஜா' ஆகிய மூன்று குறுங்காப்பியங்களும் எழுச்சியூட்டும் தலித் இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இத்துறையில் இவை முன்னோடியாக அமைந்துள்ளதைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

3) தமிழ் இலக்கியத்தில், 'சிலப்பதிகாரத்திற்கு'ப்பின் எழுந்த இசை நாடகமாக கவிஞர் படைத்த 'விதியோ? வீணையோ?' நூல் போற்றப் பெறுகின்றது.

இந்நூல் குறித்து, பேராசிரியர் சாலை இளந்திரையன், பேராசிரியர் திருமதி ராதா தியாகராஜன் போன்றோர் தங்கள் ஆய்வு நூலில் சிறப்பித்துக் கூறியுள்ளனர்.

4) பாரதியாரின் 'குயில் பாட்டிற்கு'ப் பின்னர், தமிழ்ஒளி படைத்துள்ள 'கண்ணப்பன் கிளிகள்' மிகச்சிறந்த உருவகக் காப்பியமாகப் போற்றப்பெறுகின்றது.

பேராசிரியர் க.த. திருநாவுக்கரசு அவர்கள் தாம் எழுதிய 'தமிழ்க் கவிதையில் பாரதியின் தாக்கம்' நூலில் வெகு சிறப்பாக இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

அண்மையில் திருச்சி. எம்.எஸ். வெங்கடாசலம் அவர்களால் இந்நூல் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டு, புதுவை மொழியியல் பண்பாட்டுத் துறையினரால் வெளியிடப்படவுள்ளது.

5) இந்த நூற்றாண்டில் மரபுக் கவிதையில் எழுந்துள்ள தமிழ்க் காப்பியங்களில் தலைசிறந்த நூல் 'தமிழ்ஒளியின் மாதவி காவியம்' எனத் தமிழுலகம் போற்றுதல் செய்கின்றது.

**பாராட்டுப் பெற்ற தமிழ்ஒளி கவிதைகள்**

1) சென்னை வானொலி நிலையம் 1948-இல் நடத்திய 'சுதந்திர தின விழா'க் கவியரங்கில், 'சுதந்திரம்'பற்றி தமிழ்ஒளி படைத்த கவிதை - அந்நாள், சென்னை மாகாணப் பிரதமர் கனம் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்களின் பாராட்டுதலைப் பெற்றது.

2) இந்தியாவில் - முதன்முதலில் எட்டுமணி நேர வேலைத் திட்டத்தை நடைமுறைப்படுத்தக் கோரி போராட்டம் நடத்தி வெற்றிகண்டது புதுவை தொழிலாளி வர்க்கம் (1930). இந்த நிகழ்ச்சியைத் தமிழ்க் கவிதை இலக்கியத்தில் பதிவுசெய்த பெருமை தமிழ்ஒளிக்கே உரியது. கவிதை: புதுவைத் தொழிலாளிக்குக் கோவைத் தொழிலாளியின் கடிதம்' (1949)

3) உலகத் தொழிலாளர் தினமாம் 'மேதினம்' குறித்து தமிழில் கவிதை இலக்கியம் படைத்தவரும் தமிழ்ஒளியே. (1949) இதற்கு ஒப்பாக இந்திய மொழிகளில் 'மேதினம்' குறித்து யாரும் கவிதை படைத்துள்ளதாக அறிய முடியவில்லை என அறிஞர்கள் கூறுகின்றனர்.

4) இமய மலையின் எவரெஸ்ட் சிகரத்தில் இந்தியக் கொடி பதிக்கப்பட்ட செய்தி ஏடுகளில் வெளிவந்த அன்றே சாதனை படைத்த இளம் வீரன் 'தென்சிங்'கைப் பாராட்டி கவிதை படைத்தவர் தமிழ்ஒளி. (1953)

5) 1960-களில் தமிழகத்தின் நெய்வேலியில் 'நிலக்கரிச் சுரங்கம் தோண்டப்பெற்று, வெற்றிவிழாக் கொண்டாடிய நாளில் 'நெய்வேலி நாம் பெற்ற பேறு' எனக்கவிபாடி பெருமிதம் கொண்டவர் தமிழ்ஒளி. இந்திய அரசின் நேஷனல் புக் டிரஸ்ட் நிறுவனம், சுதந்திரத்திற்குப் பின்னர் இந்திய மொழிகளில் வெளிவந்துள்ள சிறந்த கவிதைகளின் தொகுப்பாக உருது மொழியில் - வெளியிட்டுள்ள நூலில் 'நெய்வேலி' கவிதை இடம்பெற்றுள்ளது.

6) 1974-75 களில் தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் வெளியிட்டுள்ள ஐந்தாம் வகுப்பு - எட்டாம் வகுப்பு பாடநூல்களிலும் கவிஞர் படைத்த இரண்டு பாடல்கள், முறையே 'முன்னும்-பின்னும்',' அணுவின் ஆற்றல்' இடம்பெற்றுள்ளன.

7) சென்னைப் பல்கலைக்கழகம் - தமிழ்த்துறை பொன்விழா மலரில், நூற்றாண்டின் சிறந்த கவிதையாக தமிழ்ஒளியின் 'பட்டமரம்' கவிதை பதிவாகியுள்ளது.

**ஆய்வுக்களத்தில் தமிழ்ஒளி**

1) சென்னைப் பல்கலைக்கழக-'எம்.பில்'பட்ட ஆய்விற்காக முதன்முதலில் தமிழ்ஒளியின் கவிதைப் படைப்புகளை ஆய்வுசெய்து பட்டம் பெற்றவர் பேராசிரியர் திருமதி. வெ.கனகசுந்தரம் அம்மையார்(1978)

2) புதுவைப் பல்கலைக்கழக மாணவர் திரு. சவுந்திரராஜன் அவர்கள் தமிழ்ஒளியின் படைப்புகளை ஆய்வுசெய்து (பிஎச்.டி) டாக்டர் பட்டம் பெற்றுள்ளனர் (2000)

3) மதுரை பல்கலைக்கழக மாணவர் - திருமதி ஜனசக்தி ஞானவேல் என்பார், 'மாதவிகாவிய' நூலினை 'எம்.பில்' பட்ட ஆய்வு நூலாக ஏற்றுப் பட்டம் பெற்றுள்ளனர்.

4. சென்னை இராணிமேரி கல்லூரியில் 'மாதவிகாவியம்' 'எம்.ஏ.' வகுப்பிற்கு பாட நூலாக வைக்கப்பட்டது. அதனை ஒட்டி அக்கல்லூரி மாணவி ஒருவர் 'மாதவி காவியத்தை 'எம்.பில்' பட்ட ஆய்வுக்கு ஏற்றுப் பட்டம் பெற்றுள்ளார்.

இவையன்றி, சென்னைப்பல்கலை 'பி.லிட்.' பாட நூலக (1999) ஏற்றதும், பின்னர், இளங்கலை செய்யுள் திரட்டில் நூலின் சிலபகுதிகள் இணைக்கப்பட்டதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

இவையன்றி இப்போதும் பல்கலைக்கழக மாணவர்கள் பலரும் தமிழ்ஒளியின் இலக்கியப் படைப்புகளை ஆய்வுசெய்து வருவது அறியத் தக்கதாம்.

5) தமிழ்ஒளியின் 'கண்ணப்பன் கிளிகள்' நூலினை முதன் முதலில் 1971-இல் தில்லி பல்கலைக்கழகம் இளங்கலை மாணவர்க்குத் துணைப்பாடநூலாக வைத்துச் சிறப்பித்தது. பின்னர், சென்னைப் பல்கலையைச் சார்ந்த தன்னாட்சிக் கல்லூரிகள் 1. லயோலா கல்லூரி, 2. மகளிர் கிறித்துவக் கல்லூரி, 3. சென்னை கிறித்துவக் கல்லூரி (தாம்பரம்) மூன்றும் இந்நூலை இளங்கலை மாணவர்க்குப் பாடநூலாக வைத்து சிறப்பித்துள்ளன.

# படைப்புகள்

| காவியங்கள் | எழுதப்பட்ட ஆண்டு | வெளிவந்த ஆண்டு |
|---|---|---|
| 1) கவிஞனின் காதல் | 1944 | 1947 |
| 2) நிலைபெற்ற சிலை | 1945 | 1947 |
| 3) வீராயி | 1947 | 1947 |
| 4) மேதின ரோஜா | 1952 | 1952 |
| 5) விதியோ? வீணையோ? | 1954 | 1961 |
| 6) மாதவிகாவியம் | 1957-58 | 1995 |
| 7) கண்ணப்பன் கிளிகள் | 1958 | 1966 |
| 8) புத்தர் பிறந்தார் | 1958 | 1966 |
| 9) கோசலக்குமரி | 1962 | 1966 |

**தனிக்கவிதைகள்**

| | | |
|---|---|---|
| 1) நீ,எந்த கட்சியில்? | 1948 | 1948 |
| 2) மேதினமே நீ வருக! | 1949 | 1952 |
| 3) தமிழ்ஒளியின் கவிதைகள் | 1954-64 | 1966 |
| 4) மக்கள் கவிதைகள் | 1954-58 | 1987 |

**குழந்தைப் பாடல்கள்**

| | | |
|---|---|---|
| 1) அந்திநிலா பார்க்கவா! | 1948-62 | 2001 |

(1960-67களில் வெளிவந்த பாப்பா பாட்டு, பாடு, பாப்பா! இரண்டு நூல்களும், புதிதாகச் சேர்க்கப்பட்ட பாடல்களும் இணைந்த தொகுதி)

**ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1) சிலப்பதிகாரம் காவியமா? நாடகமா? | 1959 | 1959 |
| 2) திருக்குறளும் கடவுளும் | 1959 | 1959 |

| | | |
|---|---|---|
| 3) தமிழும் சமஸ்கிருதமும் | 1960 | 1960 |
| 4) தமிழர் சமுதாயம் (இந்நூலின் முற்பகுதியில் 'தமிழும் சமஸ்கிருதமும்' சேர்க்கப்பட்டுள்ளது.) | 1961 | 1962 |

**கதைகள்**

| | | |
|---|---|---|
| 1) சாக்கடைச் சமுதாயம் | 1948-49 | 1952 |
| 2) அறிவூட்டும் 100 அற்புதக் கதைகள் | 1960 | 1961 |
| 3) குருவிப்பட்டி | 1954-60 | 1961 |
| 4) உயிரோவியங்கள் | 1948-49 | 1989 |

**குறுநாவல்**

| | | |
|---|---|---|
| 1) மூன்று ஆண்களும் ஒரு பெண்ணும் | 1952 | 1952 |
| 2) மாமாவின் சாகசம் | 1952 | 1952 |

**வரலாறு**

| | | |
|---|---|---|
| 1) தோழர் ஸ்டாலின் | 1952 | 1952 |

**நாடகங்கள்**

| | | |
|---|---|---|
| 1) கவிஞர் விழா (ஓரங்க நாடகங்கள்) | 1947 | 1947 |

**அச்சில் வெளிவராத மேடை நாடகங்கள் அரங்கேற்றம்**

| | |
|---|---|
| 1) சிற்பியின் கனவு | 1945 |
| 2) சேரன் செங்குட்டுவன் | 1946 |
| 3) தோழர் ஸ்டாலின் (அரங்கேற்றப்படவில்லை) | |

**குறிப்பு:**

மேற்காணும் பட்டியலில் இடம்பெறாத ஓரங்க நாடகங்கள், சிறுகதைகள், கட்டுரைகள் புதிய தொகுப்புகளாக விரைவில் வெளிவரவுள்ளன.



''கவிஞர் **தமிழ் ஒளி** தமிழ் வானத்தில் விளங்கிய ஒரு விண்மீன்! அதன் மங்காத கவிதை ஒளியைப் போற்றுவோமாக!" - என மூதறிஞர் டாக்டர் மு.வ. மொழிந்த பொன்னுரை நிலையானது. தமிழ்ஒளி சமகாலக் கவிஞர்களில் சிறந்தவர். மரபுக் கவிதையில் ஒன்பது காவியங்கள், பலநூறு தனிக்கவிதைகள் படைத்து இறவாப் புகழ் எய்தியவர். பொதுவுடைமைக் கொள்கையில் தீவிரப் பற்று கொண்டவர். அதன் அடிப்படையில் மக்களின் பிரச்சினைகளை அணுகி தமது கவிதைகளில் பதிவு செய்தவர். அவர் படைத்த 'வீராயி' ஒரு புரட்சிக் காப்பியம். 'கண்ணப்பன் கிளிகள்' தனித்தன்மை வாய்ந்த உருவகக் காப்பியம் 'புத்தர் பிறந்தார்' - 'மாதவி காவியம்' இரண்டும் அமர இலக்கியங்கள். 'மேதினச் செய்தி'யை காவியமாக்கிய அவர், கதைகள், நாடகங்கள், மொழியியல் கட்டுரைகள் எனப் பல உரைநடை நூல்களையும் படைத்து சிறப்புற்றவர்.

கவிஞரின் நண்பரும் உற்ற தோழருமான **செ.து. சஞ்சீவி** அவர்களே இந்நூலாசிரியர். தமிழ்ஒளி மறைவுக்குப் பின்னர், அவருடைய இலக்கிய படைப்புகளைத் திரட்டி முறைப்படி தொகுத்து நூல்வடிவில் மக்கள் முன்வைத்தவர். தமிழ் ஒளியின் வாழ்க்கைப் பதிவுகளையும் கவிதை படைப்புகளின் மேன்மையையும் தெளிவுற சித்திரிக்கிறது இந்நூல்.

*Thamizh oli* (Tamil) Rs. 25

**ISBN 81 - 260 - 1719 - 8**